சிவமயம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஸ்ரீலஸ்ரீ

# ஆறுமுகநாவலர் சரித்திரம்.



இஃது

சேற்றூர்ச் சமஸ்தான ஆசாரியாரவர்கள்

ஸ்ரீமத் சிதம்பரதேசிகரவர்கள் கட்டளையிட்டருளியபடி,

ஷை சமஸ்தான வித்துவான்

இராமசாமிக் கவிராயரவர்கள் குமாரரும்,

திருவாவடுதுறை யாதீனத்துச் சின்னப்பண்டாரச் சந்நிதியாகிய

ஸ்ரீலஸ்ரீ நமசிவாயதேசிக சுவாமிகள்

மாணாக்கரிலொருவருமாகிய

**சிவகாசி - அருணாசலக் கவிராயரால்**

இயற்றப்பட்டு,

திருநெல்வேலிச்சில்லா ம-ா-ா-ஸ்ரீ, மகாவித்துவான்

**வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள்**

பரிசோதனைக்குள்ளாக்கி,

ஷை சேற்றூர்ச் சமஸ்தானம் மானேஜரவர்கள்

ம-ா-ா-ஸ்ரீ, இராக்குப்ப பிள்ளையவர்கள்

பொருளுதவியால்,

சென்னை:

அல்பீனியன் அச்சுக்கூடத்தலைவர்

சா. யோ. சவரியப்பா அவர்களால்

பதிப்பிக்கப்பட்டது.

1898.

உ

சிவமயம்.

## விநாயகர் துதி.

சீர்திகழுங்கலைமதிவேணியன்முனெல்லாம்வல்லசித்தனென்னும் [ன்
பேர்திகழுமிடுகுறியாப்பெற்றனன்காரணக்குறியாப்பெற்றதன்றெ
நேர்திகழுமறிஞரெலாங்காணவவன்பூவிரதமிவரச்செய்து [ம்.
கூர்திகழுமொருகோட்டுக்குஞ்சரத்தினடிமுடிமேற்கொண்டுவாழ்வா

---

## முருகக்கடவுள் வணக்கம்.

வகையுறுமாமலைமலையாப்பகைபெருக்கமிகவருந்துவவுறுகண்டோர்
பகையுமிலையிந்திரனுக்கெனவசுரர்குலமறுத்துப்பதியும்வாழ்வு [மாப்
மிகையுறுதவியதற்கோர்கைம்மாறுவவன்றவத்தான்மேனுட்பெற்ற
ககையுறுபூங்கொடியைமணஞ்செய்தவேற்குமரனிருசரணங்காப்பாம்.

---

## குருவணக்கம்.

கலித்துறை.

அம்பலவாணயனமெனுமாதரவாமலியும்
அம்பலவாணவமுற்றேனையாட்கொண்டருள்புரியும்
அம்பலவாணர்பரவுந்துறைசையமாருட்சீர்
அம்பலவாணகுருபான்செம்பொற்பதாம்புயமே.

---

## வித்தியாகுரு வணக்கம்.

வேறு.

சத்தசத்துணராவித்தச்சமுக்கலைத்தன்பாலாக்கி
யித்தரைதனிற்போதித்தானெவனவனெல்லாம்வல்ல
சித்தனென்றிடவெற்குண்மைதெருட்டுசீர்திகழ்கோமுத்தி
முத்தநமசிவாயமூர்த்திதாண்முடியுள்வைப்பாம்.

# இந்நூல் வரலாறு.

நிலவுலகிலெல்லாருமதியநிலவியதென்றேநிகழ்த்தப்
பலகலையுநிரம்பியாழ்ப்பாணமெனும்பாற்கடலி
லிலகியெழீஇநாவலரென்றியம்புபெயரெவர்பெறினுங்
குலவுதமையேகுறிக்கக்கொண்டபெருங்குலப்புகழார். (க)

தண்ணியசீர்தருசைவந்தழைத்தோங்கித்தலையெடுப்ப
வெண்ணியதற்கேற்றநூலெனைத்தும்வெளியேற்றியெங்கள்
புண்ணியமேயெதிர்வந்தாற்போல்வந்துபோதிக்கு
நண்ணியமெய்யாறுமுகநாவலவர்நற்சரிதம். (உ)

வசனநடையிற்சிறிதும் வழுவாதுவரைந்தறிவா
* லுசனன்பொன்னிரவிமுதலோரனையவுயர்கவிக
ணிசமிகும்யாழ்ப்பாணத்தினின்றனுப்பநேர்ந்தெவரும்
விசனமறவாங்கியிதுமெய்யென்னமிகவியந்தார். (௩)

அன்னவருட்பாண்டிநாட்டமர்சேறையம்பதிக்கு
மன்னவன்சுந்தரதாசமகராசபோசவள்ள
லென்னரியதந்தையிடத்தின்றமிழ்தேரிறைவனிவன்
றன்னரசுதழையவருடருங்குருவாமொருதக்கோர். (௪)

கருணையோருருவாகிக்கண்ணோட்டங்கட்கணியாம்
பொருளெனக்கொண்டாகமநூற்பொருளெலாம்போதவுளந்
தெருள்புனிதசீலசைவசிதம்பரதேசிகரென்பா
ரிருமையுநற்பயனுதவுமிவ்வசனமென்றருளி. (௫)

எத்தனையோவுயர்கவிஞரிருக்கவுங்கற்றிலாவெனைத்தம்
பத்தரொடுசேர்க்கவுளம்பதித்தோர்பாடுவா
யுத்தமமாஞ்செய்யுணடையொழுங்காகவெனவொருவாக்
கித்தரையிலருளினரிதைமறுப்பாரெவரம்மா. (௬)

அத்தகுவாக்கேதுணையாவடியனேன்சிற்றறிவிற்
கொத்தபடிபாடலுற்றேனுளங்கொள்கவுயரறிஞர்
சுத்தமிகுபொருட்சுவையுஞ்சொற்சுவையுஞ்சேர்வுறினுஞ்
சித்தமிசைநிலைபெறற்குச்செய்யுணடைசிறந்ததென்றே. (௭)

---

* உசனன் — சுக்கிராசாரியன்.

# இந்நூலச்சியற்றுதல் வரலாறு.

தேடிவைத்தபுதையலெனவாறுமுகநாவலன்சீர் தெரிந்து நம்மோர், பாடிவைத்தசெய்யுணூல்கணெடுத்துப் படித்தோர்பற்பலருஞ்சென்னி, சூடிவைத்தமகுடமெனக் கொளலாகும்பொருளிதெனச்சொல்விப்பன்றோட், கூடிவைத்தபேரன்பாலாயிரம் புத்தகமாக்கிக்கொடுத்தான்மன்னே. (க)

செயற்கரியசெய்வர் பெரியோரென்ன வள்ளுவர்முன்செப்பற்கேற்ப, வுயற்கரியவுறுதிபெறவிவ்வுதவிசெய்தவன்யாருணர்த்தாயென்றாற், கயற்கரியகண்ணியரசொடுமுடியுஞ் செங்கோலுங்கைக்கொண்டந்நாண், மயற்கரியமால்பிரமன்காணரியானரசுசெய்தவழுதிநாட்டில். (உ)

ஓங்குபுகழ்வளரும்வெங்கடேசுரெட்டீணிளைசைநகருயர்வேளாளர், பாங்குபெறுகுலத்துதித்தோன்சைவநெறிவழாதுபத்திபழுக்குஞ்சீலந், தாங்குமதியூகிதமிழுணருமென்போல்வார்க்கெலாந்தருவேவானவிட், டீங்குமனுவுருவெடுத்துக்கொடைதரவந்தாற்போலுமென்னும்வள்ளல். (௩)

வேற்றாருந்தம்மூராய்விடவனந்தங்கலைதேர்பாவேந்தர்மல்குஞ், சேற்றாருமெழுமலையுமானேசாதிகாரஞ்செலுத்துந்தென்றற், காற்றாருமதனிகரும்பேரெழிலாரொருநால்வர்கட்குமுன்ன, மாற்றாருமமர்ந்தபிரான்கழலேத்தும்பெருஞ்செல்வமமையப்பெற்றோன். (௪)

இந்தவிருநகர்க்கு மொருபேரரசாஞ்சுந்தரதாசேந்தலென்பான், சொந்தமிகும்பிரதிநிதியாகியிந்நாளரசுபுரிதுரையென்றோத, வந்தவனாம்பேரைநகர்நாகயசாமிக்கோமான்மனத்துளன்பு, தந்தமதிமந்திரியாய்விளங்குமிராக்கப்பனெனுந்தமிழ்வல்லோனே. (௫)

# சாற்றுக்கவி.



திருநெல்வேலி ஸ்ரீ அனவரததானநாதர்வாயில்

மகாவித்துவான்

ம-௱-௱-ஸ்ரீ நெல்லையப்பன் கவிராஜாவர்களியற்றியது.

செந்தமிழின்வரம்புணருந்தென்பாண்டிவளநாட்டிற்சேற்றூருக்கு
வந்தமுகமெனுமுகவூரிராமசாமிக்கவிப்பாவல்லோனன்பிற்
றந்தமகார்மூவருக்குமுதல்வனாய்ப்பலகலையுந்தவமேலோங்கப்
பந்தமகற்றிடுதுறைசைப்பதிநமசிவாயகுருபரன்பாற்கற்று. (க)

சிவகாசிவாசியாய்ப்பதிற்றுப்பத்தந்தாதிதிரிபந்தாதி
யுவமானமில்லாதபுராணமுடன்மாலையதற்குறுதிமேலாந்
தவமாகுந்திருப்பரங்குன்றத்துறையுமுருகர்பிள்ளைத்தமிழும்பாடிப்
பவமோனதறத்திருச்செங்கோட்டந்தாதியும்பாடிப்பரவச்செய்தோன்.

ஆயதமிழ்த்திறமைமிகவருமருணாசலக்கவிவேளகிலமெல்லாந்
ஆயநயகவிப்புலவர்தமைநிறுக்குந்துலையென்னத்தோன்றாநின்ற
ஞாயமிகுயாழ்ப்பாணநல்லூர்வாழாறுமுகநாவலன்சீர்
பாயசரித்திரஞ்சொற்றானவன்புகழ்போலிவன்புகழும்பரவற்பாற்றே.



உ

சிவமயம்.

## யாழ்ப்பாணத்து நல்லூர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ

# ஆறுமுகநாவலர் சரித்திரம்.

## நூல்.

கங்கைசேர்முடியிறைவன்றிருவருளேபொருளென்னக்கலைகளாலோ
தங்கைசேராமலகமெனத்தெளிந்தன்பொருவடிவமாகியென்று [ர்ந்
நங்கைசேராசையொழிநைட்டிகமாராறுமுகநாவலர்பு
மங்கைசேர்நல்லூரிலவதரித்ததாதியசீர்வழுத்தல்செய்வாம். (க)

## வேறு.

இலங்குமீழம்பொன்னெனும்பரியாயத்தாலின்பந்
துலங்குபூர்திருமடந்தையாழ்ப்பாணம்பதிறுதிய
மலங்குமன்னவட்குயர்வலக்கண்ணேநன்மணியா
நலங்குலாவியபேரொளிவிளங்கியநல்லூர். (௨)

கலைசிறம்பலாற்காசினிதனக்குயர்வான
நிலையடைந்திடுதெளிவினாற்றண்ணியநீரா
றுலைவில்வெண்மதியொத்ததாயினுநல்லூர்க்கோடி
மலைவிலாமையுமுண்மறுவிலாமையுமதிகம். (௧)

பாடெலங்கலைச்சங்கமுமேயுமின்பவள
மூடலாய்த்தழையுந்திருப்பெறுங்கனமுற்று
நீடுமின்பயன்படுநிலமடுக்குமிந்நீரா
ருடுபொற்கடல்போன்றதியாழ்ப்பாணத்துநல்லூர். (௨)

மாறுதிரிறைமாசிலையாவுறவளையு
மேறுபல்லுயிர்க்காசையேமிகவிளைத்தெழுநல்
லாறுகாட்டுநாவலரையுந்தாங்குமிவ்வழகா
றூறும்புகழ்மேருவேயென்னலாநல்லூர். (௩)

புகழ்வலாரியங்கூர்தருகணந்தெரிபுலவர்
நிகழ்தல்கற்பகத்தையலர்நிறைதனன்னேய
மிகழ்விலெவ்வகைப்போகமும்விளைதலாமியல்பா
லகழ்கலாவுநல்லூரொருபொன்னுலகாமால். (௪)

தேருமின்படைசத்தியங்கைவசஞ்செயலா
லாருமிச்சிகாவளமுறவேறலாலந்தங்
கூருநல்விருமாதரைமருவுசீர்கொளலா
லூருலாங்குமரனையுமேநிகர்ப்பதுநல்லூர். (௭)

குலவுசங்கமங்கைப்பற்றுஞ்சக்கரங்கொள்வார்
நிலவுமேன்மையால்வைகுந்தநிகர்க்கினுநீதி
பலவுலாவுநல்லூரினிற்படியளப்பார்க
ளலகிலாரங்கொருவனேயவனுமாலானோன். (அ)

மயர்விலாமலெந்நன்மையுமலிதலால்வல்லோ
ருயர்வினோங்குமிந்நகரநல்லூரெனவுரைக்கும்

பெயரினுண்மையேமான்மியமுழுவதும்பேசு
மயர்வுசான்றநாமிணைத்தெனப்பாடுவதுதிகம். (௯)

## வேறு.

ஆயவிந்நகரில்வாழ்வாரகிலம்யாவையுங்கைம்மாறு
பாயமுங்கருதாதென்றும்பாதுகாத்திடுங்கார்காத்த
தூயவேளாளரன்னோர்தொல்குலம்விளங்கத்தோன்றும்
வாயமைசீர்சால்பாண்டிமழவர்தங்குடியேமல்கும். (௧௦)

மல்குமக்குடிமுன்செய்தமாதவத்தாலேயன்பு
பில்குமெய்ப்பொருள்சேர்ஞானப்பிரகாசரெனும்பேர்பெற்றுத்
தொல்குலக்கொழுந்துபோலத்தோன்றினரொருவர்யார்க்கு
நல்குமிப்பெரியர்தஞ்சீர்நவின்றிடவல்லர்நாமோ. (௧௧)

ஆயினுமாசையாற்சற்றறைகுவமறத்தாறன்றிப்
பாயிரும்பறங்கிக்காரர்பற்றியாழ்ப்பாணம்வாழ்நாள்
மாயிருங்குடிகாளெங்கோமானுணவழுங்கல்வேண்டி
நீயிரும்பசுவொவ்வொன்றுநேர்மெனவிருத்தாரால். (௧௨)

என்செய்வோமென்செய்வோமென்றிரங்கியக்குடிகளெல்லா
முன்செய்தீவினையென்றெண்ணிமுறைமுறைகொடுபோய்முன்றந்
தின்செயலொன்றுந்தோராதிருக்குநாளிவர்நாளொய்தப்
புன்செயலீதுநாமும்புரிவதுதகாதுபோலும். (௧௩)

என்றுளைந்துருகியாவொன்றிந்நகர்க்கிறையாமீனன்
கொன்றுசாப்பிடும்பொருட்டுக்கொடுக்கினும்பாவங்கூடு
மின்றுநாமொருவர்காணுதிவண்விட்டேகுதலேநன்றென்
றன்றுதாமிரவிலேகியருட்சிதம்பரமடைந்தார். (௧௪)

அத்தலத்துள்ளதீர்த்தமாடிநீர்மிளகருந்திப்
பத்தராம்விரதம்பூண்டுபாசித்துநாற்பத்தைந்து
வைத்தநாளம்மைகோயின்மருங்கிருந்தருள்கைவாங்கி
யுத்தரதேயந்தன்னுளுயர்கௌடத்தையுற்றார். (௧௫)

[illegible]னிபொருவராக்குமகார்க்குமீமாஞ்சைதர்க்க
[illegible]வியாகரணமாதியோதுவித்திடல்கண்டுள்ள
[illegible]தாகமத்தைத்தூரநின்றுநித்தியமுங்கேட்பார்
[illegible]யமுமிகளைநெஞ்சட்குறித்தொன்றுமவருங்கூறூர். (கசு)

[illegible]த்திலைச்சமூகாளிலனையவாசிரியர்கற்பார்
[illegible]த்திலைசேர்திக்குங்காற்றகும்விடைதராதுநின்று
[illegible]த்திலையுணர்ந்ததூரத்தெய்திநின்றிடுமிம்மேலோ
[illegible]த்திலைமையுந்தேர்ந்தள்ளாரென்றழைத்தியம்பலுற்றார். (கஎ)

[illegible]த்துரைவத்தடொட்டெம்மிடங்கேட்டவெல்லாந்
[illegible]துமாறியப்புகென்னத்தாந்தெரிந்தவைகண்முற்று
[illegible]துமாறுக்கருள்ளமகிழ்சயித்திடச்சொற்றூர்தேர்ந்
[illegible]த்துஞன்னறிவின்மேலோரேயுயர்ந்தனரென்றெண்ணி. (கஅ)

[illegible]பாதகர்க்கேடமேலாம்பூசுரனெனப்புகழ்ந்து
[illegible]பதவிலாமன்ஞானப்பிரகாசர்தமக்குப்பின்ன
[illegible]ராதலாமுறைகற்பித்தாருயரறிவுறுமாணுக்க
[illegible]ராகக்கண்டனரேற்கற்பியாதெவரிருப்பரம்மா. (க௯)

[illegible]வைதமீமாஞ்சைதர்க்கம்வியாகரணங்களாதி
யா[illegible]வாகக்கற்றூரதற்பினாசிரியரையா
[illegible]ஈழ்நாடுசேர்வாய்நிறைபயணங்குநின்றூர்
[illegible]மதகவெய்தவென்னவிடைகொடுமீண்டுசேர்ந்தார். (உ0)

சேர்ந்தபின்புயர்வொப்பில்லாத்திருவண்ணாமலையாதீனஞ்
சார்ந்தருண்மயமாஞானசாரியன்றன்பாற்காவி
யார்ந்ததுசேற்றுச்சந்நியாசமுற்றருட்சித்தாந்தங்
கூர்ந்ததுநூல்பலதெளிந்துகொண்டனர்குறையொன்றில்லார். (உக)

பின்னருஞ்சிதம்பரம்போய்ப்பிரிவிலாதுறைந்தியாரு
முன்னரும்வடநூறன்னிலுளபவுட்கரமுன்னூல்க

ளின்னரும்வியாக்கியானமெழுதியுமதிற்சின் னூல்க
ளென்னரும்வியக்கச்செய்துமிருந்தனரிம் மட்டேயோ. (உஉ)

சீர்க்குமேலானவின்பந்திகழ்சிவஞானசித்தி
யார்க்குமோருரைசெய்தப்பாலவையெலாந்தமதாதீனத்
தோர்க்குமேதகவுண்டாகவொப்பித்தாரங்கணோர்க்கு
பார்க்குநீர்மையரெல்லீரும்பார்மின்கற்பனையீதன்றே, (உ௩)

தெரிதருமினையநூலாசிரியர்பின்சிதம்பரத்தி
லுரியதம்பெயராலோங்குமொருதிருக்குளமுள்ளான்பா
லரிமுதலோருந்தீர்த்தமாடுவானமைத்தாரென்றும்
பெரியதாமதுவேஞானப்பிரகாசமெனப்பிறங்கும். (உ௪)

இவர்சிதம்பரநடேசருஞ்சரணிடைப்புகுங்காற்
கவர்தருவரத்தினாலேகருதுதம்மரபிற்கற்ற
தவர்பலர்முன்செய்மெய்ம்மாதவத்தினாேதமக்குப்பின்சா
ரவர்பலருளுஞ்சிறந்தோராயவர்கந்தரென்பார். (உ௫)

அனையரில்லறத்திற்கேற்குமருட்சிவகாமியாரா
மனைவியர்தமைமணந்துமனையறம்பூண்டுவாழ்நாட்
டனைநிகர்சைவமோங்கத்தமிழ்கலையெடுப்பத்தாமே
புனையும்வேதாகமங்கள்பொற்பொடும்பொலியமன்றே. (உ௬)

அருட்படுசைவமன்றியகன்புறச்சமையமாங்கா
ரிருட்படுகுழியில்வீழ்ந்தாரினிவிழுநினைவாரியாருந்
தெருட்படும்வகையீடேறச்சிவமயமெங்குந்தேங்க
மருட்படும்சமயவாதம்வலியழிந்தோடமன்றே. (உ௭)

புவிபுகழ்சிவபுராணபோதநூற்பொருடெரிந்து
குவிமனங்குதுகலிப்பக்கொளுங்கழகங்குலாவச்
செவியினூற்பெயருங்கேளாத்திறன்மறைந்திருந்தசீர்சால்
கவிஞர்நூலுரையனைத்துங்கற்றிலார்தாமுங்காண. (உ௮)

கற்றலுங்கற்றற்கேற்பக்கருதுநாற்பயன்கைக்கொள்ள
நிற்றலுமிவைபிறர்க்குநினைவினினீங்காவண்ணஞ்
சொற்றலுமிவையேகற்றதூயவர்க்கழகாமென்ன
முற்றலுமெம்போல்வாருமுன்கண்டிம்முறையினிற்ப. (௨௯)

சைவமேநிறுத்துஞ்சைவாசாரியர்நால்வரோடுங்
கைவருமெந்தநூலுங்கண்டுரைகற்றோர்க்கின்பஞ்
செய்வகையெழுதவல்லாசிரியர்கணால்வரோடு
மைவராமென்னயார்க்குமதிசயமதிகமாக. (௩௦)

இன்னமுமின்னவின்னவென்றிடப்படாதநன்மை
யென்னவுநாளுநாளுமெழீஇத்தலையெடுப்பயாமேற்
சொன்னவோர்கந்தரென்னுந்தூயருந்துணையாநிற்கு
மன்னமன்னவராங்கற்பினருட்சிவகாமியாரும். (௩௧)

திருவமர்காதலான்முன்செய்தவப்பயன்றிரண்டு
கருவமர்தாலுமுள்ளங்கசிந்துநெக்குருகிக்காணும்
பருவமாறிரண்டுந்தாங்கிப்பாரெலாம்பரவும்பால
ரொருவரைப்பெற்றார்யாண்டுமுயர்தவம்போலொன்றுண்டோ. (௩௨)

பிறந்தவப்பொழுதேமைந்தர்ப்பெற்றவர்முன்னம்பெட்டாற்
சிறந்தமாதவமென்செய்தார்தெரிந்தவர்செப்புவீரென்
றுறந்தவன்பெழீஇக்குழீஇயவொவ்வொருவருமேதம்மை
மறந்தனர்களிப்பின்மூழ்கிவலப்புயந்துடிக்கமன்றோ. (௩௩)

மைந்தர்தோன்றியநாள்சாலிவாகனசகாத்தமென்னு
நந்தமாயிரத்தேழ்நூற்றுநாற்பத்தைந்தெண்ணினுடி
வந்தசித்திரபானுற்றமார்கழிமதியைந்தேதி
சிந்தலில்புதனிராவிற்சிங்கலக்கினஞ்சிறக்க. (௩௪)

உதையலக்கினத்திற்கைந்திலுதையன்சேய்புந்திசுங்கன்
றதையுறுமிராகோராறிற்சந்திரனேழிற்சார்மன்

பதைபுகழ்சனியொன்பானிற்பத்தினிற்பொன்பன்னொன்றிற்
சிதைவறுகேதுகூடித்திகழ்ந்தனர்சிறந்துதோன்ற. (௩௫)

பூருவபக்கத்தைந்துபொருந்தியதிதியவிட்டம்
பாருறுகரணந்தன்னிற்பாலவகரணம்பார்க்கி
லோருவமையுமில்வச்ரயோகமுமொன்றுகூடிச்
சீருறுசுபநாளென்றுதெரிந்தனர்தெளிந்தமேலோர். (௩௬)

இவையெலாஞ்சாதகன்மமெழுதுவோரெழுதச்செய்து
சுவையுணவூட்டலாதிசொற்றிடுங்கருமம்யாவை
யவைமுழுதுரியகாலத்தளவிலாச்சிறப்பினான்றோர்
சவைபுகழ்தரவியற்றல்சாற்றலாந்தகைமைத்தன்றே. (௩௭)

மைந்தரைக்கண்டார்கேட்டார்மகிழ்ச்சிபன்மடங்குபொங்கிச்
சிந்தனைக்கெட்டாதென்றாற்செய்தவப்பயனாலீன்ற
தந்தைதாய்மகிழ்வெற்றோமோதனையரைப்பயந்தார்தம்மு
ளிந்தநல்லிருவர்போன்மற்றெவர்பெற்றாரியாண்டுமின்றே. (௩௮)

உலகினிற்பெறுமவற்றுளுயரறிவுறுமகார்போ
னலமுறுபேறின்றென்றுநாயனார்நவின்றதிந்தப்
பலமுறுபாலர்போலும்பாலரையென்றுபார்மேற்
சிலரன்றிப்பலருங்காணத்திகழ்ந்தனர்சிறப்பினன்றே. (௩௯)

அகலிடமெங்குஞ்சைவமாக்குசம்பந்தனாரைப்
புகலியிற்பெற்றாரிந்தப்புதல்வரைப்பெற்றார்போல்வ
ரிகலிலாக்கல்விகேள்வியிருஞ்சிவபத்தியாதி
மிகவினாலெங்குஞ்சைவவிளக்கஞ்செய்வித்தான்மன்னோ. (௪0)

முருகவேள்கொண்டவாறுமுகமெனமொழிபேர்தாங்கற்
கருகராம்பாலரென்றேயறிஞரிட்டழைத்துள்ளன்பு
பெருகமாமகிழ்ச்சிகூர்ந்தார்பிதாவினும்பிறைபோனாளு
மொருகவலேனுமின்றியோங்குபுவளர்தலுற்றார். (௪௧)

## வேறு.

முத்தியாரம்பராபரன்மொய்கழற்
பத்தியாரம்பலபுனையாதம
னத்*தியாரம்பறுடலினம்மைந்தர்
வித்தியாரம்பமேவல்விளம்புவாம். (௪௨)

ஓங்குமைந்துபிராயம்வந்துற்றிடத்
தாங்குமைந்துதருங்கலைதந்தையார்
தோங்குமைந்துறத்தோன்றுநல்லோரையி
லாங்குமைந்தருணரவமைத்தனர். (௪௩)

உன்னுமைந்தர்க்குணர்த்திடவல்லனும்
பின்னுசீர்ச்சுப்பிரமணியன்பெய
ரென்னுமாசிரியன்னிடத்தின்புடன்
மன்னுபல்கலைகற்பார்வழுவற. (௪௪)

கற்குங்காலத்திலேதமிழ்க்கல்வியுண்
ணிற்குமாறுநிரம்பக்கற்பேனெனுஞ்
சொற்குன்றாதநல்வாஞ்சையுட்சோர்விலா
மற்குன்றாமெனவோங்கிவளரவே. (௪௫)

வாக்குண்டாமுதனீதிவரம்பினை
யாக்குநூல்களுமாயுங்கணிதமு
நோக்குமெய்ப்பொருட்கும்பேர்நுவன்றிடு
தேக்குசீர்நிகண்டுந்தெளிந்தார்செல்வர். (௪௬)

தெரியுமின்னவைகற்றுத்தெளிந்தபின்
பரிவுமேவியநைடதம்பாரத
மரியகாந்தமறைசையந்தாதியா
முரியநன்னூலுரைகேட்கலுற்றனர். (௪௭)

கேட்டசெய்யுட்பொருளைக்கிளர்நெஞ்சுள்
ளோட்டகத்தினெழுதுவரீதன்றி

* தியார் குறுக்கல்விகாரம்.

வாட்டமேவிமறந்துமயங்கியு
மீட்டறிந்திலர்யாரையும்வேண்டியே. (சஅ)

கூடக்கற்குஞ்சிறார்க்குந்தங்கோட்பொரு
ணீடக்கற்பிப்பர்நேர்விளங்காமந்த
மூடப்பிள்ளைகட்குப்பன்முறைபின்னு
நாடப்போதிப்பர்சோர்வின்றிநாடொறும். (சகூ)

தம்மைப்போற்பிறர்தம்மனந்தன்னையுஞ்
செம்மைத்தாக்குஞ்செயலினராய்க்கல்வி
யிம்மைக்கும்பயனென்றுமறுமைக்கு
மெய்ம்மைத்தாம்பயனென்றும்விளக்குவார். (௫0)

ஓதிலாரொருநாளுமுளத்திறும்
பூதியன்றபுகழ்பொருள்பூசைமுன்
னுதியாமிவையொன்றுமடைந்திலார்
நீதியாமென்றவர்க்குநிகழ்த்துவார். (௫க)

புத்திநாடொறும்யார்க்கும்பொருந்தப்போ
தித்திடும்மிவர்செய்கைகண்டோரலா
மித்திரத்தநன்மைந்தரையீன்றிடு
மெய்த்திருக்குலமேவிளங்குமென்பார். (௫உ)

## வேறு.

அமைதருகல்விகேள்வியான்றதன்றம்பியார்தங்
கமையறிவடக்கம்வாய்மைகண்டுளங்களித்துமூத்த
தமையனுந்தியாகராசசற்குணசாலியன்பு
சிமையமாமலைபோலோங்கச்செலுத்தினனிளையசெய்தான். (௫௩)

வினையுமின்பயிரைநாளுமெய்தெரிவார்மேற்றோன்று
முனையிலேதெரியுமென்னுமுதிர்பழமொழியுள்ளோர்ந்துள்
ளளையுமன்பமையுநல்வேலாயுதனெனும்பேரண்ண
லுனையுயர்கல்விதேறக்கொப்பித்தானிளையார்தம்மை. (௫௪)

னாயபேர்பரவயாருந்தோத்திரஞ்சொலித்துதித்துப்
பாயநல்விடயம்யாவும்படித்திடத்தலைப்பட்டார்கள். (௬௭)

அண்டவோர்தங்கட்கெல்லாமரனுயிரறம்விடாமன்
மண்டுபாவஞ்சுவர்க்கநரகொடுமறுபிறப்பு
மூண்டிடீர்காண்மினென்றுவுணர்த்தினாருணர்ந்தோரீது
பண்டுநாங்கண்டுங்கேட்டும்படித்திலோமெனப்பயின்றார். (௬௮)

இன்னநூன்முழுதுமெங்கேயெவரிடத்தென்றுகற்றா
ரன்னவாச்சரியமெய்தியிவரிடத்தன்பெல்லாரு
முன்னம்வைத்ததற்குமேல்வைத்தொழுகுதன்முறையென்றோர்ந்தா
ருன்னருமதிஞர்பாலன்புறுவறிவுள்ளோர்யாரே. (௬௯)

இப்படிநிகழுங்காலத்திருபதோடிரண்டுசேர்ந்த
வொப்பறுபிராயமெய்தியுயர்பயனுலகமெய்தத்
தப்பறுசருவிநூல்கள்சமயநூலோடுதாமே
செப்பமார்சிறார்சில்லோரைச்சேர்த்துபதேசித்திட்டார். (௭௦)

வேதனைப்பெறுதிவ்வாறுமேம்படக்கற்பிப்பாராம்
போதகர்தமைச்சென்னைக்குப்போய்வரவழைத்துப்போனான்
பாதகமிலாமலச்சிற்பைபிலைப்பதிக்கவேண்டி
மாதமிழ்விரும்பும்பார்சிவற்பெயர்வாய்ந்தோன்மாதோ. (௭௧)

வேறு.

சென்னைநகர்சென்றவுடனங்குள்ளாரிவர்வரவு தெரிந்துகொண்டு, முன்னையாழ்ப்பாணத்திற்றமிழறிஞராரியவொங்கறமுறையாற் பைபி, ளன்னையிவர்திருத்தினாரிங்குளபண்டிதர்சமுகந்தனில் வாசிக்கிற், பின்னையிதுபிழையிலையென்றொப்பேறிலச்சியற்றப் பெறுமேயென்றார்.

இவையெலாங்கேட்டபார்சிவலுள்ளந்தளர்ந்துதனதியல்வல்லாரை, யவையிலாங்கேற்றுங்கானன்குமதித்தாச்சரியென்பாரோவன்றி, நவையென்பாரோ வென்னநாந்திருத்துமிதிலேது நவின்றாராயிற்,

சுவையுறுசெந்தமிழ்மேற்கோள்காட்டியொப்பேற்றுதுமென்னத் து
ணிந்துசொன்னார்.
(௭௨)

அப்போதுசிறந்தவித்துவான்மகாலிங்கையரவரையன்றே, ரிப்
போதுமேவிரிவர்இருத்தியபைபிளைச்சரிபார்த்தியம்புகென்ன, வொப்
போதும்படிமுழுதும்பார்த்துமிகவசனநடையுயர்ச்சியுற்ற, தெப்போ
துமிதுபோலத்திருத்தமுறு இவ்வாறச்செடுகவென்று. (௭௩)

தெள்ளுதமிழ் யாழ்ப்பாணத்தினிற்சிறந்ததினியிவராற் சிறப்பு
மேன்மே, லுள்ளுறவோங்கிடுமென்னவோதினர்யாவருமொப்பலுற்ற
தோர்ந்து, நள்ளுறுபாதிரியாரும்பண்டிதருமச்சியற்றிநகரநீங்கி, யள்
ளுறுகாதலின்விரைவின்யாழ்ப்பாணம்வந்தினிதங்கமர்ந்தாரப்பால்.()

தம்முடன்கற்றாரிருவர் சின்னப்பாதில்லைநாதப்பேர்பூண்டோர்,
மம்மர்மதியாற்கிறித்துமதப்பிரவேசஞ்செய்யமதித்தோர்தங், கம்ம
வதுபொய்ம்மதமாஞ்சைவமேமெய்ம்மதமென்றனந்தமாகத், தம்மதி
யாற்றிட்டாந்தமுடன்காட்டித்தடுத்தனரத்தடுத்தசெய்தி. (௭௫)

தம்மைப்பண்டிதராகப்பெற்றபார்சிவலறிந்துதகுதியாநீர், செம்
மைப்பண்பினாரிருவர்தமைத்தடுத்தலெனவிளைச்சினவும்போதி, வி
ம்மைக்கும்பயன்மறுமைக்கும்பயனுஞ்சைவத்தினியல்புகாட்ட, வெ
ம்மைக்குங்கடமைநமக்கினிநும்பாற்பண்டிதராயிரேனென்றிட்டார்.

பாதிரியங்கிவர்வைராக்கியமுணர்ந்துதனதுமதம்பரம்பச்செய்த
ற், கேதிரிவர்வாயடக்கும்பகையெனினுந்தமிழ்போதித்திடுதற்கிந்த,
மாதிரியோர்பண்டிதரைப்பெறலரிதாதலின்மிகச்சமாதானஞ்செய்,
தாதிரிலோகமும்புகழுமீர்பொறுத்திங்கிருக்கவெனவன்பின்வேண்ட.

பின்னுமதற்குடன்பட்டுப்பரசமய விருளகற்றும் பெருஞ்செஞ்
சோதி,யென்னுமவர்தங்கடமைநடாத்திவந்தார்நடத்திவருமிதன்மே
னல்லூர், மன்னுகந்தசாமியாலயத்திலொரு மகோற்சவத்தில் வந்தக்
கோயி, றுன்னுசிவாகமவிரோதப்படச்செய்திருப்பதனைச்சூழ்ந்தாரா
ய்ந்து. (௭௮)

மூலமூர்த்திகளாதி வேற்படையாயிருப்பதுநன்முறையன்றென்
னச், சாலவுணர்ந்தம்மட்டோசிவதீக்கையிலாராராதனைசெய்தற்குப்,
பால்ரலரென்பதுந்தேர்ந் தக்கோயிலதிகாரிபாற்போதித்தார், சீலமி
லாவவனுமதற்குடன்பட்டானல்லினியென்செய்வதந்தோ. (௮௦)

என்றங்ககன்றுசைவத்துண்மையொன்றுமறியாமலெண்ணிலார்
கள், சென்றந்தக்கிறித்துமதப்படுகுழியினுள்வீழுஞ்செய்திகண்டு, ந
ன்றன்றேயினிநமது சிவசமயத்துண்மையெலா நம்மனோர்க்கோர்,
மன்றந்தமூறுமிடத்திற்ரூபித்துப்புகல்வமெனமனத்தினேர்ந்து.(௮௧)

வண்ணார்பண்ணையிலிருக்கும்வைத்தியநாதன்கோயில்வந்துட்செ
ன்று,கண்ணாரத்தரிசித்துவசந்தமண்டபத்திலங்கட்கண்டோரெல்லா,
மெண்ணாலேமதிப்பரியசபையொன்றுகூட்டியபின்பியங்குஞ்சைவத்,
துண்ணாடுபொருளுமதனுண்மையும்போதித்தனர்யாருவவாதாரே. ()

'இந்தவிதமொவ்வொருசுக்கிரவாரத்திரவினிலுமினிமையான,செ
ந்தமிழின்பிரசங்கந்தாஞ்செயல்போற்பிறர்தமையுஞ் செய்யச்செய்தா
ர், கந்தசுவாமியினல்லூராலயத்தின்குற்றமங்குக்காட்டினாரங், கெந்
தவிதமுந்தெரிந்தோர்சரியென்றார்சிலமூடரிகழ்ந்தாரன்றே. (௮௩)

வயசிருபத்தைந்தாமப்போதிந்தப்பிரசங்கம்வந்துகேட்டோ, ரய
லிருந்துகேள்வியுற்றோரநேகருக்குப்பயன்பட்டதந்தோவிந்தச், செய
லினர்முன்னிருந்தனரேற்பொய்ம்மதமித்தேயத்திற்சிறிதானாலு, மு
யலடையாதென்செயலாமுயிர்கள்செயுங்கன்மத்துக்குலகின்மீதே.()

எண்டிக்குஞ்சுவமதமேபரம்புதற்கும் பரமதத்திலெலாம்பொயெ
ன்று, கண்டிக்குமதற்கும்வேண்டுவனபிரசங்கஞ்செய்காலந்தன்னில்,
* விண்டிக்கும்புகழ்பெருகுமாறுமுகநாவலரைவியந்தாரேனு, முண்
டிக்குப்போதனைசெய்பாதிரிமார்பார்சிவல்பாலோடிச்சென்று. (௮௫)

நாங்களிங்குவரும்போதுமதற்குமுன்னுமில்லாத நடக்கையெல்
லாங், தாங்களபிமானம்வைத்தபண்டிதர்போதித்தானஞ்சமயந்தா

* விண்டிக்கும்-ஆகாயமாகிய திசையும்.

ன்மே, லோங்கலெவ்வாறினியிவரைப்பண்டிதராகீர்வைத்தனுதவா
தென்ன, வாங்கவனும்பண்டிதரைவரவழைத்துவினவுவானறியான்
போல.
(அசு)

சிவன்கோயிறனில்வெள்ளிக்கிழமைசைவப்பிரசங்கஞ் செய்கின்
றீரா, மெவன்கூறுமெனவுமதுகடமைகளிற்குறைவிதனாலென றுவெ
ன்றின்னோ, ரவன்கேட்கவுரைத்திடலும்பேசாமன்மௌனமாயமர்ந்
துசென்றோ, னவன்போம்பாதிரியீர்நீரிவர்போற்பண்டிதர்கிடையா
துலகிலென்றான்.
(அஎ)

பின்னுமிவர்வழக்கம்போற்பிரசங்கங்கேட்பார்க்குப் பெரிதுஞா
னம்,பன்னுவதாப்பலநூலின்சாரமாமறுமையிம்மைப்பயன்களெல்லா,
மன்னுவதாச்செய்வதுகேட் டியர்ந்தவித்துவான்கண்மறை வல்லமே
லோ,ரென்னுமனந்தம்பேருமதிசயித்தார்பிரசங்கமேதேதென்னில்.

நித்தியமாஞ்சைவசமயமுமந்தச்சமயிகளந்நிலையினின்று, பத்தி
செயுங்கடவுளுமப்பத்திசெய்வார்க்கங்கமொடுபயனுமிட்ட, சித்தி
தருசிவாலயசேவையும்வேதாகமவியல்புஞ்சிவபிரானைப், புத்தியினி
ன்மறவாததொண்டரியல்பாதியபுண்ணியமும்போலும். (அகூ)

இவ்வளவுமுக்கியமாம்விடயமெலாநியாயமொடுமெடுத்துக்காட்
டு, மவ்வளவுகேட்டவர்க்குண்மாமிசபோசனஞ்செய்தோ ரதனைவிட்
டா, ரெவ்வளனுமழிக்குமதுபானஞ்செய்தோரதனையிகந்தார்தீக்கை,
செவ்வனுற்றுமறந்தவர்மீட்டும்பெற்றுச்சந்திமுறைசெய்யலானார்.( )

உருத்திராக்கம்புனையாதிருந்தவரெல்லாம்புனைந்தா ருருத்திரன்
பாற், கருத்திராப்பதகரெலாஞ்சிவாலயஞ்சென்றெதிர்வணங்கிக்கம
லத்தாளுள், விருத்தினோர்தோத்திரஞ்செய்யாரதுசெய்தார்பிறரையீர்
த்திம்மார்க்கந், திருத்தினார்பூதியணியாரணிந்தார் விரததவஞ்செய்
யார்செய்தார்.
(கூக)

சைவமதநூலெல்லாம்பொய்யென்னும் பாதிரிமார்தம்மைப் பல்
கால்,லவரதன்பின்வேதசிவாகமங்கள்சிவஞானமாக்கட்காகச்,செ

ய்வாராகுரென்றுதெளிந்துகொண்டார்சித்தாந்தந் திகழ்பன்னூலு,மெ ய்வரவோர்ந்தவரடியார்செய்ததெனவாசித்தார்விசுவாசித்தார். (கஉ)

மறையெனும்வேதாகமநூற்றெளிவெனத்தேவார திருவாசகங்க ண், முறையறியாரஃதறிந்துநெட்டுருச்செய்தோதலுற்றார் மும்மூர்த் திக்கு, மிறைவராஞ்சிவபெருமானொருவரேயவர்வழிபாடியற்றுவோ ரே, கறையினெறிச்சித்தாந்தசைவரெனக்கணித்ததுவேகாதலித்தார்.

சிவாலயவந்தனைமுறைமைதெரியாமற்செய்தகுற்றஞ்சேராதாக, வவாமிகவேதெரிந்துசெய்தார்பெத்தநிலைதனினம்முளறியாவண்ணந், தவாதிருந்துமுத்திநிலைதனிற்றம்முணமையடக்குந்தம்பிரான்பா, லுவாமலியன்பாற்றுவதேதகுதியெனச்செய்தனந்தொழுதினரே.(கச)

ஒழுக்கமறியாரெலாமஃதறிந்தார்நங்கடவுளுற்சவங்கொண், டொழுக்ககலவெழுந்தருள்வதான்மாக்கட்காகவெனவாய்ந்தக்கால, முழு க்கமனம்புறம்போகாதெதிர்கண்டுபணிந்துநனிமுதிருமன்பு, பழுக்க வருட்சிபாதந்தாங்கினார்பற்பலர்யாம்பகரற்பாற்றோ. (கரு)

ஆக்கையன்பில்லாமலடித்தவர்தாமவைசிவலோகத்தினின்றிம், மாக்களுலகினில்வந்தவென்றுமவையவயவத்தின்மல்குந்தேவ, ரூக்க மிகுமுனிவர்வசிக்கின்றதாவுஞ்சிவபெருமானுவப்பினொடுந், தேக்கந னிகவ்வியமைந்துதவுவனவாமென்றுந்தெளிந்துகொண்டு. (கசு)

பூசையன்பினுற்புரிந்து புன்முதலியனவுதவிப்போற்றிவந்தார், காசைவிஞ்செலவாகக்கவறுசதுரங்கத்திற்லைகவிட்டோர்கண், மாசை விளைவிக்குமிவையெனவிகந்துசற்சனர்சன்மார்க்கந்தன்னி, லாசை யுடனடந்தவர்சொன்னல்வழியிற்செலவுசெய்தேயானந்தித்தார். ()

இவ்வாறுசனங்களெலாந்திருந்தமுறுவதுகண்டாங்கியற்றுவல்லா, ரெவ்வாறும்பாமரத்திற்புகாவண்ணஞ்சமயநூலெல்லாங்கற்கு, மவ் வாறுதகுந்தகல்விச்சாலையொன்றுதாபிப்பதமையுமென்று, செவ்வா றுபயில்வண்ணார்பண்ணையிலங்ஙனஞ்செய்தார்சிறப்புற்றோங்க. ()

இவ்விதஞ்சைவசமயிகட்கெலாம்போதனைசெய்திடவுஞ்சைவச், செவ்வியசீர்ப்பிரசங்கஞ்செய்திடவும்வாணனைச் செலுத்துவோமென், றெவ்வியலுஞ்சேருமிவர்பார்சிவற்குத்தமிழ்போதித்திடல் கைவிட்டார், திவ்வியதஞ்சோதரர்க டடைசெயவுமதனையொருசிறிதுங்கொள்ளார். (௯௯)

பெருந்தொகையாம் வேதனமு மதியாமற் பாதிரிபாற்பெயரும் போதி, லிருந்தவயசிருபத்தாறுமதன்மேற் றம்மொடுகெற் றிட்டுத்தம் மாற், றிருந்தமுனைந்திழிந் துமதப்படுகுழியில்வீழாதஇல்லைநாதற், கருந்தமிழ்நூலிலக்கணமுமிலக்கியமுங்கற்பித்தாரளவிலாமல். (௧௦௦)

எவருநவியேனுமின்றியித்தொடக்கந்தொடங்குமிவ ரெவராலு ணர்ந், சிவபெருமான்வீஇத்தவிஇதனைக்குமாறுநடந்தாற்சினமேற்கொண், டங்கவரவரைக்கண்டிப்பாராதலிற்பொறுமைசினமதிகப்பட்டுத், தவறுறுபற்பலவிடையூறிவர்க்கியற்றினாந்தோதயையிலாரே. (௧௦௧)

எவ்விடையூறெவர்செயினுஞ் சிவசமயம் வளர்விக்குமின்னோர் தம்பால், வெவ்விடையூரான்கருணைபதிதலால்விரோதமொன்றுமேவ வில்லை, யவ்விடையவ்விரோதஞ்செய்தவரெலாம்பின்னர்நட்புற்றடுத்துச்சூழ்ந்தா, ரிவ்விடையமிறைவேற்றச்சிலசிலபுத்தகங்களிலாகிருத் தல்கண்டார். (௧௦௨)

தேடிவரவழைத்தனர்தஞ்செந்தமிழேட்டுப்பிரதிச் செய்யுளெல்லா, நாடியவைகளில்வழுக்களில்லனவாச்சோதித்துநவமாகத்தாங், கூடியவாறேசிலநூல்களைச்செய்துமவை பதிக்குங்குறிப்பினாலே, நீடியவச்சியந்திரமொன் றவசியம்வேண்டுவதெனவுண் ணினைந்தாரன்றே. (௧௦௩)

வேறு.

இளையபோதகாசிரியர்மாணாக்கருளவர்க்கு
முனைவனுஞ்சதாசிவப்பெயர்கொண்டமூதறிஞன்
றனையுங்கூட்டுபுசென்னைமாநகர்தனைச்சாரு
மினைவிற்பயணம்புறப்பட்டனர்நேர்ந்து. (௧௦௪)

வேதம்பூசித்துப்பூட்டியகதவினைவிமலன்
பாதம்போற்றியேயப்பர்தாந்திறந்திடப்பாடும்
போதஞ்சேர்தலம்புக்கனர்வணங்கினர்போனார்
நாதன்றேவிமாமயிலுருக்கொண்டநன்னகரில். (௧0௫)

அங்குநின்றும்போயெங்குலகுருவாசாட்சி
தங்குசீர்த்திருவாவடுதுறையினைச்சார்ந்து
பொங்குமாமறைப்பூசுரற்காயிரம்பொன்முன்
னெங்குநல்விசைபெறத்தருமிறையைவந்தித்து. (௧0௬)

திருமடத்தைவந்தடைந்துபின்ஞானதேசிகர்கண்
மருமலர்ப்பதம்வணங்கினரிவர்வருவதன்முன்
பெருமையுற்றுயர்கல்வியாற்கேள்வியாற்பெரிது
மருமைபெற்றிடும்வல்லரென்றங்குளாரறிந்தார். (௧0௭)

ஓங்குபற்பலவிலக்கணவிலக்கியத்துள்ளுந்
தேங்குசைவசித்தாந்தசாத்திரத்தினுஞ்சில்லோர்
பாங்குபெற்றவாட்சேபங்கள்பண்ணினர்பலவா
றாங்குசொற்றனர்விடைகளொவ்வொன்றுக்குமமைய. (௧0௮)

சுருதியாதிமூன்றினுக்குமொத்திருந்தமைதுணிந்தங்
கொருதினஞ்சைவப்பிரசங்கங்கேட்டிடவுள்ளங்
கருதிநங்குருதேசிகரருள்செயக்கல்வி
தருதியாகருமங்ஙனஞ்செய்தனர்தகவே. (௧0௯)

தாமிதற்கெனத்துணிந்தவர்மறுப்பரோதகுதி
யாமிலக்கணம்பதிபசுபாசங்கட்கமைந்த
தேமிகுத்திடப்பிரசங்கஞ்செய்தனரெவரு
நாமிதற்குமுன்கண்டுகேட்டிலமெனநவின்றார். (௧௧0)

பத்தியில்லவர்தமக்குமெய்ப்பத்தியைப்பயிற்று
மித்திறத்தநற்பிரசங்கம்பத்தழகெய்தி

யுந்திமுப்பதிற்றிரண்டொடுமதங்களுமோரேழ்
வைத்திருப்பதெந்நன்மையுமுளதெனமதித்து. (ககக)

உபயசந்நிதானமுந்திருவுளத்துளேயுவந்தச்
சபையுளோர்க்குமுன்பிரசங்கஞ்செயுமிவர்தமக்குச்
சுபமிகுந்தநாவலரெனும்பெயர்சொலத்தகுமென்
றுபயநல்லருள்காட்டினரிதுபெறலரிதே. (ககஉ)

ஆருமப்பெயராலழைத்திட்டனரதன்பின்
போருநாவலர்சென்னைமாநகர்தனையுற்று
நேருறுஞ்சௌந்தரியலகரியொடுநிகண்டு
கூருநல்லுரையச்சினிற்பதிப்பித்துக்கொண்டு. (ககங)

சிலதினம்பின்னுமங்கிருந்தச்சியந்திரமொன்
றலகிலாவலியுடையதாமிருவிலையளித்திவ்
வுலகின்மேம்படவாங்கியெக்கலையினுமுயர்ந்த
வலமைமேவியநாவலரதைவிட்டுவருங்கால். (ககச)

அலைகொள்வாரிதிரும்புவிபுகழ்திருவண்ணா
மலையென்றோதுமாதீனத்திலருளொருவடிவாய்
நிலைபெறுஞ்சின்னப்பட்டமாயிருந்தசந்நிதானத்
திலையமின்றியேகாணநேரிட்டதங்கதன்மேல். (ககரு)

திருந்துகல்வியின்றிறமையுஞ்சமயத்தின்றெளிவும்
பொருந்துமாறுகண்டுவந்துதம்மடத்தினிற்புகுந்தங்
கிருந்துசில்பகல்கழிந்தபின்போமெனவிசைப்ப
வருந்துதித்தமிழ்நாவலரதற்கிசையாரால். (ககசு)

எந்தவேதுவினாலெனிற்றுறவெடுத்திட்ட
வந்தநன்முயற்சிகளும்யாழ்ப்பாணத்திலநேகர்
உந்தவேபரமதத்தினிற்புகாமையுமுடிய
விந்தவெண்ணம்யார்க்கேனுமிங்கெய்துமோவிந்நாள். (ககஎ)

இன்னம்பின்வருவேனெனத்தேசிகர்க்கிசைய
முன்னஞ்சொல்லியங்ககன்றுநாவலரெனுமுதிஞர்
பின்னஞ்சார்தராயந்திரந்தனைக்கொண்டுபெரிது
மன்னஞ்சார்வயல்சூழும்யாழ்ப்பாணம்வந்தடைந்தார். (ககஅ)

மனக்குமாமகிழ்வெய்திடக்கொடுவந்தகருவி
தனைக்குவித்தியாநுபாலனயந்திரசாலை
யெனக்குறித்தொருபெயரிட்டுத்தாபித்தங்கியல்விற்
பனைக்குழாம்புகழ்தருசிலபுத்தகம்பதிப்பார். (கககூ)

அவசியஞ்சைவசமயிகட்காவனவனைத்து
நவமதாகவும்புராதனமுள்ளவுநல்லோ
ருவமையில்பிரயோசனமுள்ளவென்றோதக்
கவனமோடுதாம்பதித்தெங்கும்பரப்பினார்காண. (கஉ0)

இன்னநூல்களாற்சைவமதந்தலையெடுத்திடல்கண்
டுன்னருங்கொலைமறுத்தனன்னூலுரையுடனே
யென்னபற்பலநூல்களுந்திருத்தியச்சிட்டா
ரன்னபோதவர்க்காயுளுமுப்பதானதுவால். (கஉக)

கிறித்துமார்க்கத்திற்பற்பலவழுக்களாங்கேடு
குறித்துக்கண்டித்துயந்திரந்தனிலொருகும்மி
பொறித்துவிட்டனரம்மதத்தவரதுபொறாமன்
முறித்துவிட்டிடத்தொடங்கினர்பலவிதமுயற்சி. (கஉஉ)

அயர்ச்சியின்றியிவ்வியந்திரநிலைபெறற்கான
முயற்சியெம்பிரான்கருணையால்வளர்வதான்முறிக்குஞ்
செயற்சிஃறீயவர்நினைவொன்றும்பலித்திடாத்திறத்தான்
மயற்சியெய்துபுதாங்களுங்கடிதங்கள்வரைந்து. (கஉங)

நீதிச்சைவதூடணங்களேயெங்கெங்குநெருங்கிப்
போதித்தாரதுநாவலர்தாங்கண்டுபொறாமல்

வாதித்தோட்டிடவச்சிரதண்டப்பேர்வரைந்தோ
ராதிப்புத்தகம்விடுத்தனரடங்கினரவரும். (கஉச)

அந்தமட்டினில்லாதுவேற்படையமரங்கைக்
கந்தர்தாமொருகடவுளரல்லர்நேர்கருதி
லெந்தமொப்பவரிருமனையுடையவரென்றுந்
தந்தம்வாயினில்வந்தனசாற்றிவந்தனரால். (கஉரு)

ஈதறிந்தநாவலரிவரடங்கவுமிவர்தூற்
போதனைக்குளேமயங்கியசிலர்க்குளபுந்தி
நோதகையநீங்கிடவுநன்னியாயங்களுவல
வாதரந்தருபுத்தகமெழுதியொன்றமைப்பார். (கஉசு)

அறுமுகப்பிரான்சத்ததாதுக்களாலமைந்திங்
கிறுமுடற்சுமையெடுத்தவரலர்தமதியற்கை
யுறுமருட்டிருமேனிகொண்டுற்றனருவந்து
பெறுமுறைக்கிசையமனைவியரிருவரும்பேசில். (கஉஎ)

கிரியையிச்சையாஞ்சத்திகள்கரங்களிற்கிளரு
மூரியவாயுதம்பதினொன்றும்பத்தினோடொன்றாம்
பெரியருத்திரர்குருராங்கிழித்தவேல்பிறங்கு
மரியஞானமாஞ்சத்தியேயாவருமறியின். (கஉஅ)

என்றொர்புத்தகஞ்சுப்பிரபோதமாமெனப்பே
ரொன்றவைத்தெங்கும்விடுப்பவுமொளித்தனரன்றே
ரன்றுமற்றவரனைவருந்தெளிந்திவையறியோ
மென்றுமிப்பொழுதறிந்தனமெனவியந்தேற்றார். (கஉகூ)

ஏற்றுச்சிற்சிலர்விசேடநாளினுஞ்சிலரென்று
நீற்றுத்தேசொளிமேனியராய்ச்சென்றுநின்று
போற்றிக்கந்தவேள்பூசைசெய்தனராதுபோழ்திற்
றேற்றுப்போயினபாதிரிமார்பலர்துவன்றி. (கங௦)

வெட்டவெட்டமேற்றழைந்திடுமரமெனமேலும்
பட்டணத்துளோராடணஞ்செயத்தலைப்பட்டார்
கட்டமேயநுபவிப்பவர்தாஞ்சுகங்கருது
மிட்டமேசவர்க்கிதுதொழிலானதாலென்றும். (சரு௧)

கண்டுநாவலர்சைவராடணபரிகார
மண்டுமென்பிறுலெழுதுபுவிடுத்தனர்மகிழ்ச்சி
கொண்டுகேல்வியேகுறைவிலாச்செல்வமாக்குறித்துத்
தொண்டுசெய்துவாழ்நாளினிற்சிலர்வந்துசொல்வார். (சருஉ)

தாங்களில்லறம்புகுவதுவேண்டுமத்தன்மை
நாங்கள்சொல்வதேதிருக்கின்றதெனப்பலநவிலத்
தீங்கண்மன்மதன்விகாரமுற்றவரிடஞ்செலுத்தும்
பூங்களம்புகாவிதமறுத்தார்பலபுகன்று. (சருந)

சுற்றமில்லறம்புகுதற்குச்சம்மதந்தரேமப்
பற்றுவிட்டதாற்சிவார்ச்சனையன்பொடுபண்ண
லுற்றுங்காலங்கள்கழித்திடுவோமெனவுயர்வு
பெற்றுவைகுந்தம்முடன்சதாசிவப்பெயர்ப்பெரியோன். (சருச)

தனையுங்கூட்டிக்கொண்டகன்குறுநாட்டினைச்சார்ந்து
நினைவெலாந்தமாசாரியரிடத்தினினிகழ்த்தி
மனையில்வைகினார்மற்றைநாட்காலையில்வந்தா
ரனையர்தூரதேசத்தவரவர்வரவுரைப்பாம். (சருரு)

படிகலிங்கங்களிரண்டுவிற்பதற்கதுபரமர்க்
கடியராகியநாவலரறிந்தவைகளையாய்ந்
தொடிவிலாவருட்குருமுனஞ்சோதித்தொவ்வொன்று
முடியவோர்ந்தனர்பஞ்சசூத்திரவிதிமுறையால். (சருசா)

ஒன்றுமாத்திரங்குற்றமில்லாததாயுயரு
நன்றுபெற்றிடுமிலக்கணமுள்ளதாய்நான்கா

மென்றுசொல்வருணத்தவர்பூசிக்குமியல்பு
துன்றுமேன்மையுற்றிருந்ததியாதினுந்தூய்து. (கஅஎ)

சோதிப்பார்திறங்கண்டவாசாரியர்கருங்கப்
போதிப்பாருயர்நாவலீருடையவர்பூசை
நீதிப்பார்புகழ்சீர்செயீரெனிலன்புமிகழு
வேதிப்பார்தனிலுடையவர்பூசைசெய்திடுவோர். (கஅஅ)

என்னநைட்டிகப்பிரமசாரியவொழுக்கினிலே
மன்னலாயினராதலாலதற்குச்சம்மதித்தா
ரன்னபூசையுமவர்தமாணாக்கராயடுத்தார்
பின்னமில்கணிகலிங்கபூசையுஞ்செயப்பெற்றார். (கஅ௯)

பெற்றங்கேசிலநாளிருந்திருவருட்பேணிப்
பற்றங்கேள்வியாற்பூசையிலேமிகப்பழகி
யற்றங்கேடடையாமல்யாழ்ப்பாணம்வந்தடைந்தார்
மற்றங்கேவருங்காலென்னான்கவாறுவயசே. (க௯௦)

வேறு.

இப்படிமிகழுநாளிவரிலேகற்றோ
ரெப்படியும்புகழில்லறத்தினின்
மெய்ப்படியேபிரவேசித்தார்சிலர்
செப்படியாரொடியாத்திரைசென்றார்சிலர். (க௯க)

தந்தமிழ்வித்தியாசாலையோங்கிடே
யெந்தநாளுநிலையெய்தலாம்படி
முந்தவேயிருபங்கண்முடித்துவிட்டன
ரந்தநன்னிருபமேற்றவரேகருள். (க௯உ)

இலங்கையின்றலைநகரெனுங்கொழும்பினி
லிலங்கையமரும்பிரபவர்க்குமீந்திடு

நலங்கையாரியற்பெயர்நன்னித்தம்பியா
நலங்கையாரனுப்பினர்நாற்சதச்செம்பொன். (௧௯௩)

அத்தொகையேமுதலாகவைத்துத்தம்
வித்தியாசாலையின்மிக்கபோதனை
யுய்த்தனர்வந்துகேட்டோரெலாநிதி
தத்தமக்கியன்றநுதந்துசென்றனர். (௧௯௪)

திரவியமிங்ஙனஞ்சேரச்செய்தநற்
பிரபுபால்வேதனம்பெற்றுப்பிள்ளைகட்
குரமிகுமறிஞராமுபாத்தியாயருட்
கரவிலாதன்புடன்கற்பித்தாரரோ. (௧௯௫)

தருமமாம்வித்தியாசாலையின்பொருட்
டொருபெருவர்த்தகசாலையுத்தம
விருந்தியீந்துகொண்டிரண்டுசாலையும்
பெருமையேமல்கு*தம்பெயரைப்பெற்றவர். (௧௯௬)

திருந்துமானுக்கராஞ்செட்டியாரிடத்
திருந்திடவொப்புவித்தெழுந்துசென்னைபோய்
வருந்திறமெண்ணுபுமறைகள்வந்தனை
பொருந்துமாரணியத்துட்போற்றிப்புக்கனர். (௧௯௭)

இத்தலமாதியாந்தலங்களேத்திச்சென்
றுத்தமச்சிறப்புப்பேரொன்றுதாம்பெற
வைத்தசந்நிதானங்கள்வாழ்வுமல்கிடுஞ்
சுத்தமாமாவடுதுறையடைந்தனர். (௧௯௮)

பொங்குமன்பெழவெழப்போற்றிப்பூசைசெய்
தங்குநற்சந்நிதியாக்கினைப்படி

---

* தம்பெயர்பெற்றவர்-ஆறுமுகச்செட்டியார்.

தங்குசைவப்பிரசங்கந்தாந்திசை
யெங்குமேபரவச்செய்திருந்திட்டாரின்றன். (௯௰௯)

பிரசங்கங்கேட்டதம்பிரான்களோதுவார்
வரசங்கஞ்சாத்திரிமார்பிரபுக்கள்
முரசங்கள்போலவேமுழக்குசெந்தமி
ழரசர்நாவலர்க்கருமைசெய்தனர். (௧௱)

பின்னரவ்விடம்விட்டுப்பெயர்ந்துபோய்ப்பெரு
மன்னவர்பணிதருமபுரமடைந்தனை
ரன்னவாதீனபண்டாரசந்நிதி
தன்னமர்பூங்கழற்சரணம்போற்றியே. (௧௱௧)

ஆயசந்நிதானநல்லருள்பெற்றங்கணுந்
தூயநற்பிரசங்கந்தொடுக்கச்செய்தனர்
சேயநாள்சிலகழிந்திட்டபின்னுற்று
நாயனூர்சம்பந்தர்கரநன்னிஞர். (௧௱௨)

பேணியப்பரைச்சமண்பிரித்துக்கட்டிய
தோணியப்பலாயிருந்தவைகொண்டாற்றுநேர்
காணியப்பரையவரைக்கனகமாமய
வேணியப்பரையருள்வேண்டிப்போயினர். (௧௱௩)

பதஞ்சலிவியாக்கிரபாதர்க்காகவே
விதஞ்சலியாநடித்தார்செய்தல
மதஞ்சலிசெய்யமென்றனைப்போற்றிமே
லதஞ்சலியாதுபின்றனைவிருத்தனர். (௧௱௪)

தேசமாத்தலையின்றலிங்கவெத்
தேசமும்புகழ்சென்னைசேர்ந்துமாணிக்க
வாசகர்திருவாசகத்தொடு
மாசகல்கோவையார்சோதித்தாய்ப்பால். (௧௱௫)

சிலசிலபுத்தகந்தினமுஞ்சோதித்து
வலமிகுசதாசிவவள்ளல்பேரினாற்
பலமுறவச்சினிற்பதித்தியாவரு
மிலதெனவிதம்வெளியேற்றினாரன்றே. (௧௫௬)

## வேறு.

அந்நாளிற்கல்விசெல்வமளவிலாதொருங்கமைந்தோ
னெந்நாளுங்கவிவாணரியற்றிறமைக்கேற்றபடி
பொன்னாலுமணியாலும்போதமகிழ்புரிந்திடுவோன்
றன்னாமமெவ்வுலகுந்தான்பரவவதரித்தோன். (௧௫௭)

ஏதமிலாவள்ளலெனுமீகைபயின்றிடும்ராம
நாதபுரந்தனிலரசுநடாத்துதுரைராசனுக்குப்
போதனைசெய்ம்மந்திரியாம்பொன்னுச்சாமிப்பெயரோ
னீதனுறுமிவர்திறமையிவர்செய்நூலினிற்கண்டான். (௧௫௮)

கண்டுநாவலரோடுங்கலந்துகருத்தானந்தங்
கொண்டுதிருவள்ளுவர்நற்கோவையாருரையுமறி
வண்டுதர்க்கசங்கிரகமன்னம்பட்டியமுமவை
பண்டுளதோமறப்பார்த்துப்பதிப்பிக்கும்படியாக. (௧௫௯)

மிக்கதிரவியங்கடருவேனென்றுவேண்டுதலு
மக்கணமேயதற்கிசைவுற்றவைகளைப்பார்த்தச்சிட்டுத்
தக்கவர்கடஞ்சமுகந்தமக்குத்தாமேவிடுத்தா
ரெக்கலையுமுணர்ந்தார்க்கிங்கிதுவியப்போவியம்புங்கால். (௧௬௦)

அதன்சிறப்பெல்லாந்திருவாவடுதுறையிலருளுருவாய்
மதன்றிறத்தேகாநமசிவாயமூர்த்திகண்மடத்தி
லெதன்சிறப்புந்தெரிந்துணருமினியவித்துவானென்னுஞ்
சுதன்சிறப்பார்மீனாட்சிசுந்தரநாவலன்சொல்லும். (௧௬௧)

ஆன்றபாயிரத்துள்ளுமவர்மாணாக்கரிற்புத்தி
மான்றமிழ்நூலினிலெனநாவலர்பலருமதித்துவக்குந்
தேன்றதும்புமாலையணிதியாகராசச்செட்டி
தான்றனிசொல்பாயிரத்துந்தமிழ்விரகர்தாமுணர்வார். (௧௬௨)

இதுநிற்கநடராசரெழுந்தருளுஞ்சிதம்பரத்தின்
முதுசைவப்பிரகாசமுந்துவித்தியாசாலை
யதுவைக்குமாசைமிகவதன்பயனுமதற்குதவி
கதுவிச்செய்வார்பயனுங்கண்டுநாவலர்கையால். (௧௬௩)

மிகவரைந்துபத்திரிகைவெளியிட்டார்மேன்மையெலாம்
புகலரியதிருமயிலைப்புரிதனிலேபோதமிகத்
திகழ்திருவண்ணாமலையாதீனத்தின்றிலகமென
வகலாமலிருந்தருளுமாறுமுகதேசிகரால். (௧௬௪)

அறிந்துசிலவோதுவாராலழைத்தங்கவர்வாயிற்
பிறிந்தறியாதமர்சைவப்பிரசங்கம்பிறர்பொய்ம்மத
முறிந்திடக்கேட்டிவரறிவின்முதிர்வெனமொழிந்தவர்க்குச்
செறிந்ததமதுருத்திரசஞ்சியமெடுத்துத்திருக்கரத்தால். (௧௬௫)

சாத்திரநாவலரையுபசரித்தனுப்பத்தாமவரை
யேத்தியுயர்பலதலமுமிறைஞ்சுபுநல்லெழிற்றில்லை
தோத்திரஞ்செய்தருணடஞ்செய்சுவாமியையுங்கைதொழுதுள்
ளாத்திரமோடேதுறைசையடைந்துகுருவடிபணிந்தார். (௧௬௬)

சற்குருவம்பலவாணசாமியாலச்சாமி
பிற்குருசுப்பிரமணியபெம்மானும்பெரிதுந்தந்
நற்குணநற்செய்கைகளைநன்குமகிழ்ந்தலம்பெற்றார்
கற்குமவரேபெரியர்காசினியிற்கனம்பெறற்கே. (௧௬௭)

தமைவியந்துகனஞ்செய்யுஞ்சற்குருதேசிகர்தம்மே
டிமையளவும்பிரியாமலிலக்கணநூலிலக்கியநூ

சிலசிலவைதிகமறையோர்சிவாகமத்தேர்ச்சியையடைந்தார்
சிலசிலவைதிகமறையோர்திருமுறையெல்லாந்தெளிந்தார். (௧௮௧)

வைதிகமார்க்கத்தினிலெண்மடங்குசைவமார்க்கமே
யுய்திபெறத்தழைத்தெங்குமோங்கியதாலுறுமிதற்கென்
றெய்தியநாவலர்சீர்த்தியென்னென்பேமெம்பிரான்
செய்திருநல்லருள்போலுஞ்செப்பலாந்தகைத்தன்றே. (௧௮௨)

வேறு.

ஆன்றநாவலர்க்காயுளுநாற்பஃதானபின்
சான்றவித்தியாசாலையும்வர்த்தகசாலையு
மென்றதம்மிடங்கற்றமாணாக்கனெனச்சொலுந்
தோன்றலாந்தில்லைநாதனைப்பார்க்கச்சொலிவிட்டு. (௧௮௩)

சென்னபட்டணஞ்சென்றுதிரும்பநற்சிந்தைசெய்
தென்னமேன்மையுமெய்துதிருவிராமேச்சுர
முன்னஞ்சென்றுவணங்குபுசேதுவின்மூழ்கிப்பின்
மன்னர்போற்றுமதுரைவணங்கமதித்தனர். (௧௮௪)

இராமநாதபுரத்துக்குப்போயங்கிருக்கின்ற
தராதலம்புகழுந்துறைசைமடந்தனில்வாழ்
பராயசீர்கொள்விசுவலிங்கப்பெயர்ப்பண்ணவன்
விராவுமன்பினில்வேண்டவிருந்தனர்மேவியே. (௧௮௫)

அந்நகர்க்கிறையாகியிங்காளராசாட்சிசெய்
மன்னர்கோமகன்சீர்த்தியையார்சொலவல்லவர்
பன்னருங்கலைபற்பலவாய்ந்தப்படிநிற்கும்
நன்னர்வாய்மையிரக்கங்கொடைநன்னடையுளான். (௧௮௬)

நீறுகண்டிகையேபொருளென்றுநினைந்தனித்
தூறுமன்பினிலோசைபெறவைந்துமுச்சரித்
தேறுசீர்ச்சிவபூசைபுரியுமியல்பிறழ்
கூறுமுத்தியடையவாவியகொள்கையான். (௧௮௭)

சேதுநானஞ்செய்தோர்தனைவந்துதெரிசித்தா
லோதுபேறுண்டெனுமொருவார்த்தையுலகெலாம்
போதுமாறுபுகழையடைந்தபுரவல
னேதுபுண்ணியஞ்செய்தனனோவிதற்கெண்ணியே. (௧௮௮)

பொங்குசைவமதமுமஃதுபொலிவுறத்
தங்குசைவசித்தாந்தமுஞ்சங்கத்தமிழுமே
யெங்குமாகமனிதவடிவமெடுத்துல
குங்குவாழ்பல்லுயிர்க்குமோர்தாயெனவுற்றுளான். (௧௮௯)

மாரவேளுமருண்டுமடந்தையராகியே
யாரமாரவணியும்புயாசலத்தன்புடன்
சேரவெண்ணும்பெருவனப்பெய்துஞ்சிறப்பிற்பூ
பாரமெண்கிரியெண்கரிநீங்கப்பரித்துளான். (௧௯௦)

அளந்துகல்வியளவுபொருண்மரியாதையோ
டுளங்களிக்கநம்போலியர்க்கீயுமுதுகண்டோ
ரிளம்பிராயத்திலேகற்றிலஞ்செய்வதென்னென்றுட்
டளர்ந்துசோர்தரவென்றுமிச்செய்கைதவறுறான். (௧௯௧)

கற்றமேலோர்கழகம்பலநகரங்களி
னற்றமிழ்விளங்கும்படிவைக்குநலந்தர
லுற்றபாற்கரசேதுபதியெனுமொண்பெயர்
பெற்றவன்றிசைகாணுஞ்செங்கோல்கொண்டபெற்றியான். ( )

பெருக்குஞ்சிரிவ்விறைக்குப்பெரியபிதாவெனுந்
தருக்குநேர்பொன்னுச்சாமிநரேந்திரன்றன்னைக்கண்
டுருக்குமன்பிலராயினர்முன்சென்னையுற்றிரு
வருக்குமெய்துமொருமனத்தாபமிதித்தரோ. (௧௯௩)

அந்நராதிபனாவலர்வந்ததறிந்தன
னென்னராயினுநஞ்சமத்தானத்திலெய்தினம்

முன்னர்வந்திலராயினரில்லைமுதிருநா
பின்னர்வந்திலரென்வியப்பென்றுளத்தெண்ணியே. (௧௯௪)

வெருவுமாறிறைநிடத்துள்ளநல்லித்துவா
ஒருவன்பாலிதுணர்த்தலும்போயதிற்றுங்குநான்
வருகிறேனென்றவன்சொலிநாவலர்வைகிடத்
தருகில்வந்திருந்தன்புசெலுத்தியளவளாய். (௧௯௫)

இன்னுமிந்நகர்மன்னனைக்கண்டிடவில்லையோ
வென்னும்போதிலதற்கிட்டயில்லையெனக்கென்றார்
பின்னுமிந்நகர்வந்திருக்கின்றவோர்பெற்றியான்
மின்னுநீர்கண்டிபோதன்முறையென்றுமீண்டனன். (௧௯௬)

அரசன்பாற்சென்றவையினைத்தூதுசொல்லினனவன்
பாசுநாவலரிங்கெய்திநம்மையும்பார்த்திடா
தூரமொட்டேனைமக்கவமானமுறுமொரு
தாமினுஞ்சென்றவர்வாச்செய்விர்தமிழ்வலீர். (௧௯௭)

என்றனுப்பவுமேகிப்பிரசங்கத்தின்னருட்
குன்றமொப்பவர்தம்மைக்கலந்துபின்கூறுவா
ரொன்றயாரிங்குறினுமெமர்க்குமுதவுமெம்
மன்றனைக்கண்டிபோதலெங்காருமுக்கமே. (௧௯௮)

ஆனதாலவற்காணவுமக்கண்படாமலே
போனதற்புதமாமவர்தன்றிப்பொருவிலா
ஞானநாவலராருமுமக்குநலமன்றே
தானமிந்தசுசாற்றினையென்றனுந்தாஞ்சொல்வார். (௧௯௯)

ஒருவர்க்காணவிருப்பமிலார்தமையுற்றுநீர்
மருவிக்காணும்படிசொல்வதுநன்மதியுமன்
றருமைத்தாமன்பிலாதவென்னைச்செய்வதுமெமக்
கிருமைக்கும்பயனென்றுரைத்தென்னனுமேமினன். (௨௦௦)

ஏகிவேந்தனைக்கண்டிங்ஙிகழ்ந்தவெலாஞ்சொன்னான்
னூகியாகியநாவலர்பாலின்னுமோர்தரம்
போகிப்பார்த்திங்குவம்மெனக்கூறினன்புந்திமே
லாகியோர்தமைக்காணவெவர்க்கன்படாததே. (௨௦௬)

வேந்தனாணைமறுப்பதற்கஞ்சியிவ்வித்துவான்
போந்தனன்மறுநாளினினாவலர்போந்தவற்
காந்தன்மையொன்றுங்கூறிலராஃதறிந்தப்புறஞ்
சாந்தமன்னன்வலிமையுமேன்மையுஞ்சாற்றினான். (௨௦௭)

அவையனைத்தையுங்கேட்டருணாவலராகியோ
ரிவைகட்குஞ்சிவராவிதையேயொன்றிறைவன்செய்
நவையனைத்தையுஞ்சொல்லிக்கண்டித்தனர்நாவல
ரெவைசொன்னாலும்வராரெனவேந்தற்கிவன்சொல்வான். (௨௦௮)

இத்தகைத்திறமிங்கெய்தியாருமிசைத்திலர்
சித்தமார்தருநின்னதிகாரஞ்செலுத்தென்று
னுத்தமத்திறமன்றதுசெய்வதுயர்ச்சியே
யெத்தகைத்திறத்தும்பெற்றவரவர்க்கின்னினி. (௨௦௯)

பகையெதேனுஞ்செய்தானமக்கேசம்பவித்திடத்
தொகையில்கேடிங்ஙனெய்தும்பிறவித்துவான்கணோர்
தகையினாலர்நாமேவலிந்துதழுவியெவ்
வகையிலாவதழைப்பதுவேநன்மதியென்று. (௨௧௦)

ஒருபாயங்கருதிவயிணவமோருபு
தேருஞ்சாத்திரிமார்களைக்கொண்டுதெளிவினிற்
சாருஞ்சைவசமயப்பிரசங்கஞ்சாற்றினா
லாருங்காணவதனைமறுப்பமதன்றியும். (௨௧௧)

தறையில்வைணவமார்க்கமுயர்வென்றுதாபிப்போ
பிறையவைக்களத்தென்றோர்கடிதமெழுதுவித்

துறையுநாவலருக்கனுப்பித்தனனுற்றதன்
முறையுணர்ந்துமிகப்பரிகாசமொழிந்தரோ. (உ0எ)

அக்கரப்பிழையின்றியெழுதவுமாய்ந்திலா
மக்களோநஞ்சமயத்தைவாதஞ்செய்வாரென்று
மிக்கவாசகம்பேசித்திருப்பிவிடுத்தனர்
தக்கவாறுசெயநினைந்தான்பொன்னுச்சாமிவேள். (உ0அ)

கன்றுதாயைப்பிரியினுந்தாய்ப்பசுக்கன்றினைத்
துன்றுமன்பொடுபாலுவந்தூட்டுஞ்சுரந்துநா
மொன்றுகுற்றமறியாதியற்றியுளதெனி
லின்றுதாமும்பொறுத்திங்கெழுவதியற்கையே. (உ0கூ)

என்னுமிப்பொருள்கொண்டகவியொன்றியற்றுபு
பின்னுந்தம்வித்துவானிடமீந்தனுப்பித்தனன்
மன்னுநாவலர்வாங்கியப்பாடலைவாசித்தே
யின்னுமன்பினொருவர்வலிந்தழைத்திட்டுநாம். (உக0)

போகலாமைசிறப்பன்றெனவெண்ணிப்போவதற்
காகவேயோரமைதிசெய்தாரதரண்மனைக்
கேகலாமவர்செய்கட்டுப்பாடொன்றுமின்றென
யோகநாவலரிட்டபடியங்கணுற்றனர். (உகக)

ஆயபோதிலருந்தமிழ்நாவலரையெதிர்
போயழைத்துப்புரவலனுட்கொடுபோந்தபின்
னேயவோராசனத்திலிருத்தியியல்பல
மேயகல்விப்பிரசங்கஞ்செய்திடவேண்டினன். (உகஉ)

ஆயுநாவலரன்னவன்வேண்டுதற்காகநற்
றூயுமானவர்சொல்லியசைவசமயமே
யேயுமெய்ச்சமயம்மெனும்பாடலெடுத்திசைத்
தோயுமாறில்பிறப்பிறப்பில்கடவுள்சிவன். (உகங)

ஒருவரேயவர்தம்மைவழிபடுவோரெலா
மருவுசைவசமயமேமெய்ச்சமயமென்று
கருகும்விண்டுமதத்தைநியாயம்பல்காட்டுபு
பெருகுசாத்திரிகண்முனங்கண்டித்துப்பேசினர். (உகச)

ஓதுமப்பிரசங்கமகிழ்ந்தங்குயரிரு
சாதுராவையழைத்துத்தமிழ்ப்பிரசாரகீ
ரேதுமன்பிற்கொடுப்பதுகொள்வதியல்பெனும்
போதுமன்னவனன்பின்முதிர்ச்சிபுறங்கண்டு. (உகரு)

வேறு.

ஆகவென்றனராதலால்வன்றனருங் கொடைக்கையினுலெடுத்த வர்தம், வாகணிந்தனறுகியேட்டினிலே வரையும்வல்லநூல் பலபல வாய்ந்த, நேகமாம்பயனுலகினுக்கெய்த நீவிரச்சிடவேண்டுமிந்நியதி க், கோகையாணிஇயுதவுவலென்று ஞேமென்றேற்றுத்தம் முறையு ளுற்றனரால். (உகசு)

மற்றநாட்டிருவுத்தரகோச மங்கையுற்று மாமகேசனை வணங் கி, நற்றவம்பயின்முனிவரன்மடத்தை நாடிப்பின்னருநணியதைவிட் டுப், பெற்றமூர்பவராறுபத்துநான்கு பிறங்குமாடல்கள்செயப்பெறும் பதியை, யுற்றமர்ந்தனராயுளுநாற்பத் தொன்றுசென்றதாலுயருநா வலர்க்கு. (உகஎ)

சங்கவாணர்வாழத்தலத்தாசன்றனக்குவெப்பநோய்தவிர்த்தருள் புரியுந், துங்கமாமறையோர்மடந்தன்னிற் றுலங்குதேசிகசுவாமிக ளோடு, மங்கண்வாழ்சைவப்பிரபுக்கள்வேண்டு மதற்கிசைந்துசின் னாளினிதமர்ந்து, தங்களுயகர்கோயிற்குநிதம்போய்த் தரிசனஞ்செ ய்துதாம்வரலானர். (உகஅ)

அரசுசெய்தரு ளங்கயற்கண்ணி யம்மைசந்நிதானத்திலத்தலத் தின், பெருமையிந்திரனரும்பழியகற்றும் பிஞ்ஞகன்றிருவருட்பெ ரும்பெருமை, பரவுசைவசித்தாந்தத்தின்பெருமை பலவுமோர்தினம்

பயில்பிரசங்க, முறைசெய்தாரிவைகண்டுகேட்டறியா ருள்ளவென்றி
யாருங்களிப்புறவே. (௨௧௯)

கோயிலர்ச்சகரம்மைக்குச்சாத்திக் கொண்டுவந்தபூநியைக்கை
யிற்கொடுத்து, வாயின்வல்லநாவலவர்தந்தலையின் மன்னுசிர்ப்பரிவ
ட்டமுஞ்சூட்டித், தாயின்மிக்கபேரன்பினுன்மாலை தரிக்கப்பெற்று
மேதகுசிறப்புடனே, யாயிலின்னுதென்றளப்பிலாப்பெருமை யமை
மடாலயமதனில்வந்தமர்ந்தார். (௨௨௦)

மீட்டுமங்கொருநாட்பிரசங்க மிகச்செய்தாரதுவிரும்புபற்பல
ரும், கேட்டுச்சைவசமயமுமச்சமயங் கெழீஇயதம்பிரான்முனுங்கே
டின்றி, நாட்டுமேன்மையுற்றவையெனவுணர்ந்தார் ஞானதேசிகராய
ருணல்கு, மீட்டுபல்புகழ்மகாசந்நிதான மியங்குதகுஞ்செவியிட்டவே
டத்தை. (௨௨௧)

திருக்கரங்களாலெடுத்திவர்செவியிற் சேர்த்தல்கண்ட சின்னச்
சந்நிதான, முருக்கமோடுதம்மாறுகட்டிகளை யுடனெடுத்தணிந்துவ
கையுட்கொண்டு, தருக்கஞாயமாரிலக்கணக்கொத்திற் றங்குமையங்
கடவிர்ந்தனர்கேட்டங், கிருக்குநாளினிற்பூவணம்போய்வந் தேடக
முதலியதலமெய்தி. (௨௨௨)

வணங்கிவந்தபின்றெய்வயானையைமுன் மணஞ்செயெம்பிரான்
வாழுமாமலைசென், றிணங்கியன்புடன்றொழுதுபின்றுளங் கிருந்து
பின்னருமதுரையிலேகி, யுணங்கிவந்தவர்க்கருள்செயுங்குருவா முப
யசந்நிதியுத்தரவுயர்நற், குணங்கிளர்தரவளர்க்கு நாவலர்கைக்கொடு
திருப்புத்தூர்சென்றுகைகுவித்து. (௨௨௩)

## வேறு.

தெண்டிரையுலகம்போற்றுந் திருவண்ணாமலையாதீனங்
கொண்டிருந்திடுநற்குன்றக்குடியினைக்குறித்துவந்தங்
கண்டியமடாலயத்திலருட்குருவடியைச்சார்ந்து
தொண்டியல்புற்றூர்சின்னட்டயதேசிகர்சொற்கொளால். (௨௨௪)

தங்குநாளருட்பண்டாரச்சந்நிதிதாஞ்சித்தாந்தத்
தெங்குமாட்சேபஞ்செய்யவிவருங்கேட்டவைகட்கெல்லா
மங்குநற்சமாதானஞ்சொற்றநேகநாளகற்றியோர்நாட்
பொங்குசாத்திரிகண்மிக்கபுராணிகர்முதலோர்முன்னம். (௨௨௫)

தடையறுசைவசித்தாந்தத்துயர்வையுஞ்சார்ந்தோர்க
ளடையுறுபயனையுந்தம்மாலளந்தறிந்தமட்டுங்
கடன்மடையிறந்தெனக்கண்டவர்வியக்குமாறுங்
கடைவொடுபிரசங்கித்தாரவரையொப்பாவாருண்டோ. (௨௨௬)

தமைநிகர்பிறவாதீனந்தங்குதேசிகர்தாமேனு
மமைதருபல்லக்கேறியங்கெறியனுகவொட்டா
வுமையொருபாகனீத்திங்குற்றசந்நிதானமோங்குங்
கமைபெறுமிவர்தேர்மிக்ககல்விவன்மையினைக்கண்டு. (௨௨௭)

திருமலிசிவிகையேற்றிச்சிறந்தசாத்திரிகளாதி
மருவுதம்பிரான்களோடுவார்கள்பற்பலவயங்கும்
விருதுகண்முன்புசெல்லவியனகர்வலஞ்செய்வித்தார்
பொருவில்பன்னாளிருந்தப்புறம்விடைபெற்றுப்போனார். (௨௨௮)

சிறந்தமண்கூடையீசன்றிருமுடியேறச்செய்தார்
பிறந்தமாநகருட்போயெம்பிரான்கழல்பெரிதுந்தாழ்ந்தங்
கறந்தவாதுறைகோமுத்தியாதீனமடத்திலன்பின்
றிறந்தவறாதுசின்னாள்செலவிருந்தனரிச்செய்தி. (௨௨௯)

தமிழ்மறையெனுந்தேவாரந்தனைப்பலதாஞ்சோதித்துள்
ளமிழ்தெனயாருங்கொள்ளவச்சடித்துதவுமன்ப
னிமிழ்திரையுலகெலாஞ்ஜோதிராமசாமிப்பேரேந்தல்
சிமிழ்மூலமடவாராசைசிறிதுந்தேரான்றெரிந்து. (௨௩௦)

சென்றுநாவலர்பாற்கேட்டுத்திருவிளையாடறன்னிற்
றுன்றுசந்தேகந்தீர்த்தான்றுகளில்வன்றொண்டச்செட்டி.

யொன்றுநன்னூல்விருத்தியுரையிற்சந்தேகமொன்று
மென்றுமின்றென்னக்கேட்டானிதற்பினிந்நகர்விட்டேகி. (௨௯௧)

தொண்டைமான்புதுக்கோட்டைக்குத்துதியுடன்சூழவந்தா
ரண்டையினாட்டுக்கோட்டையரியவர்த்தகரனந்தர்
பண்டைநூல்வல்லார்வந்தபான்மைபற்பலகாற்கேட்டுக்
கொண்டகமகிழ்ந்துவந்துகுழீஇநெடுங்குடியிற்செய்யும். (௨௯௨)

புரிசெய்கும்பாபிடேகப்பொருட்டழைத்திடலும்போவா
*ரரிமளவாலயத்திலங்குளார்யாரும்வேண்டத்
திரிபுராந்தகர்தஞ்சீருஞ்சிவனடியார்தஞ்சீரும்
பெரியதோர்சிவசின்னத்தின்பெருமையுமெடுத்துப்பேசி. (௨௯௩)

அச்சிவசின்னந்தாங்குமவர்கண்மாமிசமருந்த
லிச்சியாதிருக்கவேண்டுமெனப்பிரசங்கித்திட்டார்
மெய்ச்சியங்கிதுகேட்டோர்மாமிசமுணல்வெறுத்துவிட்டா
ருச்சிமேற்கொளுமின்னோருமுயர்நெடுங்குடியூருற்று. (௨௯௪)

சிவபிரான்சேவையோடுசிவப்பிரசங்கமுஞ்செய்
தெவரும்வந்துபசரிக்கவேற்றந்நகர்விட்டேகி
யுவமையில்லாவானைக்காவுயர்சிராப்பள்ளியோடு
தவமலிதஞ்சையாதிதலங்களைச்சார்ந்துபோற்றி. (௨௯௫)

மாமகவிசேடங்கொண்டுவைகியதலத்தில்வந்து
தாமகலாதிருந்தார்தஞ்செய்திதனைக்கோமுத்திக்
கோமகராசயோகங்கொண்டசற்குருவென்றோத
லாமகாசந்நிதானமறிந்துதம்மடாலயத்தில். (௨௯௬)

வித்துவானாயிருந்துவிரும்புதேவாரமெய
வுத்தமவிசேடமுற்றவுயர்பலதலங்கட்கோங்கும்

---

* அரிமளம்-ஓர் தலம்.

புத்தமுதனையபாடற்புராணஞ்செய்போதமாருஞ்
சுத்தநற்குணமீனாட்சிசுந்தரத்தோன்றலோடு. (உகஎ)

ஓதுவார்சிலரையுஞ்சேர்த்தொருங்குடன்சென்றுநீரிப்
போது நாவலரைநம்பாற்புகுவியும்போமென்றோதச்
சாதுவாமவருஞ்சென்றுசைவபோதகரைக்கூட்டித்
தீதுதீர்மடத்தில்வந்தார்தேசிகர்தமைச்சேவித்து. (உகஅ)

போதகரிருக்குநாளிற்புறமதப்புரட்டெப்போக
வேதவாகமசித்தாந்தவிரோதமில்விதமதாக
வேய்தமிழ்ப்பிரசங்கத்தாலிலக்கணவிலக்கியத்தின்
வாதஞ்செய்வார்கட்கையமறைத்தலான்மகிழ்தலானார். (உகக)

இத்தலமகன்றுபின்னரியங்குபுள்ளிருக்குவேளூ
ரத்தரைவணங்கியென்பாலரிவைசெய்தவர்பிறந்த
சித்திசேர்தலம்வணங்கிச்சிதம்பரஞ்சென்றுபோற்றி
நித்தநன்னடனஞ்செய்வார்நிறைபெருங்கருணைநீரால். (உசo)

வித்தியாசாலையொன்றுமேலைவீதியினிற்கட்டி
வைத்துநன்முகூர்த்தந்தன்னில்வந்தமாணாக்கரெல்லாஞ்
சித்திபெற்றிடக்கற்பிக்கச்செய்தனர்சிறார்களெல்லாம்
புத்தியான்முன்னஞ்செய்தபுண்ணியம்போலுமன்றே. (உசக)

கருவிநூல்பலவுற்றேறுகொண்டவர்களிக்குமாறு
பொருவிலாச்சமயநூலும்போதிக்கும்பொற்பினாலே
மருவியகல்விச்சாலைவைத்தவர்தமைமதித்தே
யிருமையும்பெறலாமிங்கேயியல்கற்றோரெனவிதந்தார். (உசஉ)

எங்குல்குருவாதீனமென்னுங்கோமுத்தியாதி
தங்குபற்பலவாதீனசந்நிதானங்கள்சைவம்
பொங்குநல்லொழுக்கமிக்கபுகழ்ப்பிரபுக்கண்மற்றோ
ரிங்குநன்னடேசர்பாதமிறைஞ்சிடவரும்போதெல்லாம். (உசந)

அன்புடன்கல்விச்சாலையடைந்துபிள்ளைகளையங்கே
முன்புறநிறுத்தித்தக்கமுறைமுறைபரிசோதித்துப்
பின்புநாவலர்தாம்பெற்றபேறேபேறென்றுபேசி
யின்புறுபுத்தகங்களியல்பரிசெனவேயீவார். (௨௪௪)

நாவலர்தரிசனத்தானாகைக்காரோணநாடிப்
போவதுபுரிந்தாரங்கேபோந்தமைதெரிந்துபூவாழ்
மாவதிநாட்டுக்கோட்டைவர்த்தகர்சிலர்கள்வந்து
மேவரப்பேசித்தில்லைவித்தியாசாலைமேன்மேல். (௨௪௫)

நடைபெறவேண்டுமென்றுநன்னிதிநல்கவாங்கிக்
கொடையுளங்கொடிருவேட்டக்குடியுற்றுக்கும்பிட்டேத்தி
யடைதிருக்கடவூரேகியங்கண்ணாருள்பெற்றன்பே
யிடையறுத்தில்லைமூதூரெய்தினரிருந்தாரிந்நாள். (௨௪௬)

தில்லைவாழ்கோயிற்பூசைசெய்குநர்சிலர்திரண்டங்
கெல்லையில்சிவாகமங்களியம்புதீக்கையினாலே நு
மில்லைமெய்ப்பயனீதாலேயினுபெருநிருக்கின்றேறுமென்
றெல்லைநிந்தித்தாரொன்றுமுணர்ந்திலார்க்குணர்வுண்டாமோ. ()

இன்னுமவ்வாயைத்திலியற்றுறுங்கிரியையெல்லாந்
துன்னும்வைதிகமாமென்றேறசொற்றனரச்சொற்கேட்டோ
ரென்னுநன்மதிசற்றேறனுமிலர்சிலர்மெய்யேயென்றார்
மன்னுசைவப்பயிர்க்கோர்மழையெனவருநாவல்லார். (௨௪௮)

தாமவைமுழுதுங்கேட்டுத்தரித்திலராகிச்சைவ
மாமலர்மலருஞ்சாலைவைப்பினின்மதிவல்லோர்முன்
னேமமார்விதிவிலக்கினியல்பெலாமெடுத்துக்காட்டிப்
பாமரர்வாயடங்கும்படிபிரசங்கஞ்செய்வார். (௨௪௯)

வைதிகக்கிரியைசொல்லுமறைபொருவானநூலா
மெய்திறமுத்தியின்பமுதவுறுதுயருந்தீக்கைச்

செய்தியுந் திரியதார்த்தச்செயலுஞ்சொல்சிவாகமங்கள்
மெய்திகழ்பரார்த்தபூசைவிதியுஞ்சொல்சிறப்புநூலாம். (௨௫௦)

ஆனதாலவைகள்சொல்லுமருட்சிவதீக்ஷையாவு
மேனையதீக்ஷைக்கெல்லாமேற்றமாமிதுவெல்லாம
லூனமாம்பாசமூன்றுமோட்டுமிவ்வுயர்ச்சியோர்ந்து
தேனலர்கமலவாவித்தில்லைச்சிற்றம்பலத்துள். (௨௫௧)

அருட்சிவசத்திகாணுமங்கடமன்பிற்கண்ட
திருப்பதஞ்சலியாரிந்தச்சிவாலயகிரியைசெய்தற்
கொருப்படுஞ்சிவாகமத்தாலோங்குபத்ததியொன்றுள்ள
விருப்புடன்செய்தாரிந்தவிளைவுமுன்மிகவுணர்ந்து. (௨௫௨)

ஆதியிற்றில்லைவாழுந்தணரெலாமன்புமேற்கொண்
டோதுநற்சிவதீக்ஷைகளுற்றுறைந்தனர்களாயிப்
போதுவாழ்வோரதின்றிப்பூசித்தல்பொருவிலாவிம்
மீதுயரிரண்டுநூற்கும்விரோதமாமெனவிளம்பி. (௨௫௩)

அதிபிரபல்ஞாயத்தாலவர்களைக்கண்டித்தந்தப்
பதிசிலநாளிருந்துப்பாற்சென்னபட்டணஞ்சென்
றெதிருமன்பரைநேசித்தங்கிருந்தனரீதுநிற்க
கதிர்புகாவளஞ்சூழ்சோலைக்கருங்குழிநகரில்வைகும். (௨௫௪)

பேர்பெறுமிராமலிங்கபிள்ளையென்பவர்தாம்பேறுஞ்
சீர்பெறுசிவாநுபூதிச்செல்வரென்றுரைத்துஞ்சித்தத்
தேர்பெறவோதாதாய்ந்தோரென்றுமெங்கெங்குமுள்ள
ஓர்பெருமயக்கமெய்தவுணர்த்தினரிஃதொன்றோதான். (௨௫௫)

ஞானசம்பந்தமூர்த்திநாயனாரதிகல்லோ
ரானசிவாநுபூதியடைந்தவரருளிச்செய்யத்
தானமையருட்பாவெல்லாந்தவிர்த்துத்தம்பாக்கடம்மை
யீனமில்விழாக்காலத்துமிருவகைப்பூசையிலும். (௨௫௬)

சந்தியாகாலத்துஞ்சில்சனங்களையோதச்சாற்றி
வந்திடலானாரைப்பால்வாதவூரடிகள்வாயா
லுந்தியவாசகத்தோடுயர்திருக்கோவையாரை
யந்தினஞ்சபாநடேசரன்றெழுதியதைப்போல. (உருஎ)

இயம்புதங்கவிகளெல்லாமெழுதுவரெழுதற்கேற்ற
நயம்படுகருவியேடுநாஞ்செயும்ரசவாதத்தில்
வியன்பெறுபொன்னாற்செய்யவேண்டும்பின்மிஞ்சுமந்தச்
செயந்தருபொன்னாற்பார்பதீபுரமெனப்பேர்செப்பும். (உருஅ)

ஆலயமொன்றுமுள்ளேயவையொன்றுங்கட்டியங்கே
சீலமார்சிதம்பரத்திற்றிருநடஞ்செய்வார்தம்மைச்
சாலவந்துயர்நிருத்தஞ்சகலருந்தரிசித்தேத்த
வேலவேசெயச்செய்வேமென்றியம்பினரிம்மட்டேயோ. (உருக)

இற்றனர்யாருமான்மாவெய்தவுமினியமைந்தர்
பெற்றிலார்பெறவுமங்கம்பின்னமுற்றோரப்பின்ன
முற்றிலராகவுஞ்செய்வோந்தண்ணீரூற்றித்தீபம்
பற்றிநின்றெரியுமாறுபண்ணினமெனவும்பார்மேல். (உசுo)

அரிபிரமாமுன்னோரறிவருந்தம்பிரானார்
பரிவொடுநடந்துசென்னைபட்டணத்தெருவிற்பாதி
யிரவினிற்றம்மில்வாயிலினைத்திறப்பித்துமைந்தா
தரமுடன்வாங்குகென்னத்தமக்கொன்றுதந்தாரென்றும். (உசுக)

தடநிறைவளஞ்சூழ்ந்தகூடுதில்லைத்தலத்தில்வாழ்சபாநடே
ருடனிரண்டறக்கலந்தவுயர்வாதவூரார்போலத்
திடமுடனாமுமங்ஙன்சேருவமென்றும்பின்னும்
படர்செய்பல்பயனில்சொல்வாய்ப்பறைபலவடிப்பாராகி. (உசுஉ)

ஊறுமிந்திரசாலஞ்செய்வோரிவர்தமக்கொப்பாரே
தளர்விறந்திரத்தான்மிக்கசமர்த்தர்தாமென்றுந்தம்மை

வளர்திருவருட்ப்ரகாசவள்ளலாரென்றும்வாய்வீண்
குளறியல்பேசலுற்றார்குறித்திலர்மேற்கோளொன்றும். (௨௬௩)

திரமுறுகல்விச்செல்வஞ்சிறார்க்கருடியாகராசப்
பிரபுவாஞ்சிவப்பேறன்பிற்பெற்றநாவலரிப்பெற்றி
புரமெலாம்பரவல்கண்டும்பொறுப்பரோபுலமைமிக்கார்
வரவெதிரவையினின்றுமதுரவாசகஞ்சொல்வாரால். (௨௬௪)

மறையினுமுயர்தேவாரமலிதிருவாசகங்க
ணிறைசிவகரணம்பெற்றுநிகழ்பசுகரணநீங்கு
முறைதெரிநாயன்மாரான்மொழிதருமுதன்மையாலே
யிறைபயில்கோயிலாதியெங்குமோதிடற்காமென்றும். (௨௬௫)

அந்திமாமதியும்பாம்புமணிமுடிச்சடையெம்மண்ண
றந்திருவாக்காற்சொல்வேதத்தினுந்தமக்குநாளு
முந்தியபிரியமேன்மேலுளவிவையென்றுமைக்கு
முந்தியாகசியத்தின்மொழிந்ததுமுதலாஞ்சான்று. (௨௬௬)

பிறவுமங்கெடுத்துக்காட்டிப்பிள்ளைபாப்பெரியரோதாத்
திறமுறச்செய்தாரிந்தச்செய்தியாவுந்தெரிந்தங்
குறவுறுபிள்ளையார்க்கற்றோர்சிலருறுவதோரா
ரறமுறுமிவரைநிந்தித்தாரவர்பவமெற்றோமோ. (௨௬௭)

அந்தநிந்தனையொன்றேனுமருட்சிவனடியராணோர்
தந்தமான்மியத்தோடேவேதாகமவியல்புஞ்சாற்றி
வந்தனராதலானாவலர்தமைவருத்தவில்லை
யிந்தநாளாயுளாறேழெய்தியதிவருக்கிப்பால். (௨௬௮)

மேலதாஞ்சைவமோங்கும்வித்தியாசாலைமேய
பாலர்கள்படிக்கமூன்றாம்பாடம்வேண்டுதலாற்பற்பல்
சீலமார்சிவாகமங்கள்செழுமறைசிவபுராண
நூலமைநீதியெல்லாநுட்பமோர்ந்தொருங்குநோக்கி. (௨௬௯)

வாக்கியரூபமாகவுரைந்ததன் முடிவில்வெள்ளைவை
வாக்கியல்வாக்குண்டாநல்வழியுஞ்சீர்வல்லகல்வி
தேக்கியசிவப்ரகாசர்செய்தநன்னெறியுஞ்செம்மை
தேக்கியவுரைகளோடுந்திகழ்தரச்சேர்த்தச்சிட்டார். (உஎ௦)

சீர்பெறுவசனமாகத்திருவிளையாடல்காந்தம்
பேர்பெறுநாயன்மார்கள்பெரியபுராணம்பின்னு
மேர்பெறச்செய்தங்கச்சிலிட்டுவந்தனரிடுங்காற்
கூர்பெறுகவனஞ்சென்றகொள்கையால்வருத்தங்கொண்டார். (உஎக)

உடன்மெலிவுண்வெறுப்போடுறக்கமின்மையுமுண்டாகக்
கடமைகண்முற்றுறாதகருத்தினராய்ச்சில்காலம்
படர்முழுதகல்வான்சும்மாபயின்றுபின்பழஞ்சிநேகத்
திடமிகுபொன்னுச்சாமித்தேவமன்வேண்டல்செய்ய. (உஎஉ)

சேதுபுராணம்பார்த்தச்சியற்றினுரதன்மேற்றேர்வா
ரோதுஞானக்கோமுத்தியுயர்குருவாயன்புற்றோர்
பேதுறுவண்ணஞ்செய்சுப்பிரமணியப்பேர்வள்ள
லேதுகட்டளையிட்டாலுமெவர்மறுத்திடுவரம்மா, (உஎங)

அளியினுலருளிச்செய்யவறிந்தநாவலருமங்ங
னெளிதிதுவெனவிளம்பாவிலக்கணவிளக்கச்சூறு
வளியிலக்கணக்கொத்தெல்லாம்வல்லவர்மகிழுமேலாந்
தெளியதொல்காப்பியச்சூத்திரவிருத்தியுஞ்சோதித்து. (உஎச)

அச்சினிலிட்டேக்காந்தமதனொடும்வேறநேக
மெச்சியநூல்களெல்லாம்வெவ்வேறுமிகப்பதிப்பித்
திச்சியாநின்றோர்க்கெல்லாமெங்கெங்கும்வெளியேற்றிப்பின்
புச்சிமேலறிஞர்கொள்ளுமுயர்சிதம்பரம்வந்துற்றூர். (உஎரு)

ஆயநாளங்காடெங்குமளப்பிலாமாரிபெய்ய
வேயவொவ்வொருதினத்துமிறந்தனரெண்ணிலாதார்

பாயவிக்கொடுமைகண்டோர்பயப்படாவண்ணம்பல்கான்
மாயனாலறியாநம்மான்மகிமையையெடுத்துவாழ்த்தி. (௨௭௬)

பொற்புறப்பிரசங்கித்துப்பொழுதுபோக்குவரப்போது
நற்புகழ்ப்பிராயந்தானுநாற்பத்துநான்காநம்போ
லற்புறப்படிப்பார்தம்மையடைந்திடலரியகல்வி
வற்புறுத்திப்போதிப்பார்மகிழ்சென்னைவந்தாரப்பால். (௨௭௭)

அத்திருநகரிலுள்ளவருட்சிவபத்திமான்கள்
பித்திரித்திடுநற்சைவப்பிரசங்கம்பெரிதுஞ்செய்யு
மித்திறம்பிரார்த்தித்தார்களிவருமங்ஙனஞ்செய்திட்டார்
சுத்தியாவருமங்கெய்தச்சுக்கிரவாரந்தோறும். (௨௭௮)

இச்சிவபத்திமான்களிற்சிலர்திரண்டெழுந்து
மெச்சியற்றொண்டைநாட்டில்விளங்குதேவாரம்பெற்ற
நற்சிவதலங்கள்சேர்சிரணந்தவிர்தரநன்றாளிற்
பொற்சிறுகாசுசேர்க்கும்பொருட்டொருசபைபுதுக்கி. (௨௭௯)

பிறந்திறந்துழலுஞ்செய்கைபெறாச்சிவபிரானைப்பாடன்
மறந்திடாநால்வரோடிவருமொருவராகுமென்னுந்
திறந்திகழ்தருசித்தாந்தந்தெளிந்தநாவலரைவேண்டி
யறந்திறம்பாச்சபைக்கங்கதிபதியாக்கிக்கொண்டு. (௨௮௦)

சிவபுண்ணியத்தின்சீலந்தெளிவுறச்செப்புகென்ன
விவர்கடாம்வேண்டிக்கொள்ளவிதற்கென்னதடையொன்றில்லை
யவரவரெளிதிற்றாமேயறியுமாறனைவருக்கு
முவமையில்பிரசங்கஞ்செய்திடலுற்றாரொப்பிலாதார். (௨௮௧)

வேறு.

தங்கடங்கள் சமயமுமச்சமயத்தின் றலைவனுமத்தலைவன்ற
ன்னை,யிங்கமரான்மாக்கள்வழிபடுமுறையுமிதையந்தவிறைவனேற்று

வாக்கியரூபமாகவுரைந்ததன்முடிவிலெள்ளவை
வாக்கியல்வாக்குண்டாநல்வழியுஞ்சீர்வல்லகல்வி
தேக்கியசிவப்ரகாசர்செய்தநன்னெறியுஞ்செம்மை
தேக்கியவுரைகளோடுந்திகழ்தரச்சேர்த்தச்சிட்டார். (௨௭0)

சீர்பெறுவசனமாகத்திருவிளையாடல்காந்தம்
பேர்பெறுநாயன்மார்கள்பெரியபுராணம்பின்னு
மேர்பெறச்செய்தங்கச்சிவிட்டுவந்தனரிடுங்காற்
கூர்பெறுகவனஞ்சென்றகொள்கையால்வருத்தங்கொண்டார். (௨௭௧)

உடன்மெலிவூண்வெறுப்போடுறக்கமின்மையுமுண்டாகக்
கடமைகண்முற்றுறாதகருத்தினராய்ச்சில்காலம்
படர்முழுதகல்வான்சும்மாபயின்றபின்பழஞ்சிநேகத்
திடமிகுபொன்னுச்சாமித்தேவமன்வேண்டல்செய்ய. (௨௭௨)

சேதுபுராணம்பார்த்தச்சியற்றினாரதன்மேற்றேர்வா
ரோதுஞானக்கோமுத்தியுயர்குருவாயன்புற்றோர்
பேதுறுவண்ணஞ்செய்சுப்பிரமணியப்பேர்வள்ள
லேதுகட்டளையிட்டாலுமெவர்மறுத்திடுவாரம்மா. (௨௭௩)

அளியினாலருளிச்செய்யவறிந்தநாவலருமங்ங
னெளிதுவெனவிளம்பாவிலக்கணவிளக்கச்சூறு
வளியிலக்கணக்கொத்தெல்லாம்வல்லவர்புகழுமேலாந்
தெளியதொல்காப்பியச்சூத்திரவிருத்தியுஞ்சோதித்து. (௨௭௪)

அச்சினிலிட்டுக்காந்தமதனொடும்வேறநேக
மெச்சியநூல்களெல்லாம்வெவ்வேறுமிகப்பதிப்பித்
திச்சியாநின்றோர்க்கெல்லாமெங்கெங்கும்வெளியேற்றிப்பின்
புச்சிமேலறிஞர்கொள்ளுமுயர்சிதம்பரம்வந்துற்றார். (௨௭௫)

ஆயநாளந்நாடெங்குமளப்பில்மாரிபெய்ய
வேயவொவ்வொருதினத்துமிறந்தனரெண்ணிலாதார்

பாயவிக்கொடுமைகண்டோர்பயப்படாவண்ணம்பல்கான்
மாயனலறியாநம்மான்மகிமையையெடுத்துவாழ்த்தி. (உளசு)

பொற்புறப்பிரசங்கித்துப்பொழுதுபோக்குவரப்போது
நற்புகழ்ப்பிராயந்தானுநாற்பத்துநான்காநம்போ
லற்புறப்படிப்பார்தம்மையடைந்திடலரியகல்வி
வற்புறுத்திப்போதிப்பார்மகிழ்சென்னைவந்தாரப்பால். (உளள)

அத்திருநகரினுள்ளவருட்சிவபத்திமான்கள்
பித்திரித்திடுநற்சைவப்பிரசங்கம்பெரிதுஞ்செய்யு
மித்திறம்பிரார்த்தித்தார்களிவருமங்ஙனஞ்செய்திட்டார்
சுத்தியாவருமங்கெய்தச்சுக்கிரவாரந்தோறும். (உளஅ)

இச்சிவபத்திமான்களிற்சிலர்திரண்டெழுந்து
மெச்சியற்றொண்டைநாட்டில்விளங்குதேவாரம்பெற்ற
நற்சிவதலங்கள்சேர்சிரணந்தவிர்தரநன்ஞனிற்
பொற்சிறுகாசுசேர்க்கும்பொருட்டொருசவைபுதுக்கி. (உளக)

பிறந்திறந்துழலுஞ்செய்கைபெறுச்சிவபிரானைப்பாடன்
மறந்திடாநால்வரோடிவருமொருவராகுமென்னுந்
திறந்திகழ்தருசித்தாந்தந்தெளிந்தநாவலரைவேண்டி
யறந்திறம்பாச்சபைக்கங்கதிபதியாக்கிக்கொண்டு.

சிவபுண்ணியத்தின்சீலந்தெளிவுறச்செப்புகென்ன
விவர்கடாம்வேண்டிக்கொள்ளவிதற்கென்னதன
யவரவரெளிதிற்றேயறியுமாறனைவருக்
முவமையில்பிரசங்கஞ்செய்திடலுற்ற

வே

தங்கடங்கள் சமயமுமச்
ன்னை,யிங்கமரான்மாக்கள்வழியடே

வாக்கியரூபமாகவரைந்ததன்முடிவிலெள்ளவை
வாக்கியல்வாக்குண்டாநல்வழியுஞ்சீர்வல்லகல்வி
தேக்கியசிவப்ரகாசர்செய்தநன்னெறியுஞ்செம்மை
தேக்கியவுரைகளோடுந்திகழ்தரச்சேர்த்தச்சிட்டார். (உஎ0)

சீர்பெறுவசனமாகத்திருவிளையாடல்காந்தம்
பேர்பெறுநாயன்மார்கள்பெரியபுராணம்பின்னு
மேர்பெறச்செய்தங்கச்சிலிட்டுவந்தனரிடுங்காற்
கூர்பெறுகவனஞ்சென்றகொள்கையால்வருத்தங்கொண்டார். (உஎக)

உடன்மெலிவுண்வெறுப்போடுறக்கமின்மையுமுண்டாகக்
கடமைகண்முற்றுறுதகருத்தினராய்ச்சில்காலம்
படர்முழுதகல்வான்சும்மாபயின்றுபின்பழஞ்சிநேகத்
திடமிகுபொன்னுச்சாமித்தேவமன்வேண்டல்செய்ய. (உஎஉ)

சேதுபுராணம்பார்த்தச்சியற்றினாதன்மேற்றேர்வா
ரோதுஞானக்கோமுத்தியுயர்குருவாயன்புற்றோர்
பேதுறுவண்ணஞ்செய்சுப்பிரமணியப்பேர்வள்ள
லேதுகட்டளையிட்டாலுமெவர்மறுத்திடுவாரம்மா. (உஎங)

துளியிலருளிச்செய்யவறிந்தநாவலருமங்ங
னொளிதிருவெனவிளம்பாவிலக்கணவிளக்கச்சூறா
வளியிலக்கணக்கொத்தெல்லாம்வல்லவர்புகழுமேலாந்
தெளியதொல்காப்பியச்சூத்திரவிருத்தியுஞ்சோதித்து. (உஎச)

அச்சினிலிட்டுக்காந்தமதனொடும்வேறநேக
மெச்சியநூல்களெல்லாம்வெவ்வேறுமிகப்பதிப்பித்
திச்சியாநின்றோர்க்கெல்லாமெங்கெங்கும்வெளியேற்றிப்பின்
புச்சிமேலறிஞர்கொள்ளுமுயர்சிதம்பரம்வந்துற்றார். (உஎரு)

ஆயநாளந்நாடெங்குமளப்பிலாமாரிபெய்ய
வேயவொவ்வொருதினத்துமிறந்தனரெண்ணிலாதார்

பாயவிக்கொடுமைகண்டோர்பயப்படாவண்ணம்பல்கான்
மாயனுலறியாநம்மான்மகிமையையெடுத்துவாழ்த்தி. (உஎசு)

பொற்புறப்பிரசங்கித்துப்பொழுதுபோக்குவரப்போது
நற்புகழ்ப்பிராயந்தானுநாற்பத்துநான்காநம்போ
லற்புறப்படிப்பார்தம்மையடைந்திடலரியகல்வி
வற்புறுத்திப்போதிப்பார்மகிழ்சென்னைவந்தாரப்பால். (உஎஎ)

அத்திருநகரிலுள்ளவருட்சிவபத்திமான்கள்
பித்திரித்திடுநற்சைவப்பிரசங்கம்பெரிதுஞ்செய்யு
மித்திறம்பிரார்த்தித்தார்களிவருமங்ஙனஞ்செய்திட்டார்
சுத்தியாவருமங்கெய்தச்சுக்கிரவாரந்தோறும். (உஎஅ)

இச்சிவபத்திமான்களிற்சிலர்திரண்டெழுந்து
மெச்சியற்றொண்டைநாட்டில்விளங்குதேவாரம்பெற்ற
நற்சிவதலங்கள்சேர்சிரணந்தவிர்தரநன்றுளிற்
பொற்சிறுகாசுசேர்க்கும்பொருட்டொருசவைபுரக்கி. (உஎகூ)

பிறந்திறந்துழலுஞ்செய்கைபெருச்சிவபிரானைப்பாடன்
மறந்திடாநால்வரோடிவருமொருவராகுமென்னுந்
திறந்திகழ்தருசித்தாந்தந்தெளிந்தநாவலரைவேண்டி
யறந்திறம்பாச்சவைக்கங்கதிபதியாக்கிக்கொண்டு. (உஅ0)

சிவபுண்ணியத்தின்சீலந்தெளிவுறச்செப்புகென்ன
விவர்கடாம்வேண்டிக்கொள்ளவிதற்கென்னதடையொன்றில்லை
யவரவரெளிதிற்றேமயறியுமாறனைவருக்கு
முவமையில்பிரசங்கஞ்செய்திடலுற்றுரொப்பிலாதார். (உஅக)

## வேறு.

தங்கடங்கள் சமயமுமச்சமயத்தின் றலைவனுமத்தலைவன்றன்னை, யிங்கமரான்மாக்கள்வழிபடுமுறையுமிதையந்தவிறைவனேற்று

ச், துங்கமிகுகருணைசெயுமுறைமையுமோர்ந்தோர்ந்தபடிசுத்தரானோ
ர், பங்கமிலாதநுட்டிக்கும்பான்மையுநங்கடனாகும்பாரின்மீதே. ( )

சைவரெனுஞ் சொற்கருத்துச் சிவனைவழிபடுவரென்றதாகுமச்
சைவ,ராவராமந்தியசைவருங்கூட்டியறுவரெனலாமவர்க்குண், மெ
ய்வளருமாதிசைவரநாதிசைவராய்விளங்கும்விமலமூர்த்தி, தெய்வமு
கமைந்தில்வருமுனிவர்கோத்திரச்சிவவேதியராமன்றே. (௨௮௩)

மகாசைவர் வைதிகப்பிராமணருட் சிவதீக்கைவாய்ந்தோராவர்,
சகாயமிகுமநுசைவர்மன்னர்வணிகருளதனைச்சார்ந்தோராவர், சுகா
தாரமுறுமவாந்தரசைவர்சூத்திரராஞ்சேர்வு, மிகாதபிரவரசை
வராநுமேலாமருளுமதுவிளங்குற்றோரே. (௨௮௪)

அந்தியசைவராவார்களொழிந்திடுமெல்லாச்சாதியார்தம்முள்ளு,
முந்தியநற்சிவதீக்கைபெற்றவர்களெயிதனுண்முக்கண்மூர்த்தி, யெந்
தையைவேதியராதிபுலையரீறுமியவரெல்லாமேத்திச், சிந்தைசெயற்கு
ரியரெனல்பெறப்பட்டதாயினுநாந்தெருங்காலை, (௨௮௫)

வழிபடலாங்கிரியைவருணந்தோறும்வெவ்வேறுவகையாமுக்க
ண், விழியிறைவன் சிவலிங்கமுதற்றிருமே னியுந்தனதுமெய்ம்மைத்
தொண்ட, ரழிவறுவேடமும்புறத்தேயிடமாகக்கொண்டுநின்றுமகத்
தேயான்மா,வொழிவிலிடமாக்கொண்டுநின்றருளுஞ்சிவலிங்கமோரிர
ண்டாம். (௨௮௬)

ஆன்மார்த்தம்பரார்த்தமெனுமவ் விரண்டின் முன்னையதாசான்பா
லேற்றுத், தான்மாற்றாதவருமற்றன் பொருட்டுப்பூசிக்கத்தக்கதாகு,
நான்மாற்றம்புகலரியபரார்த்தந்தான் பிறர்பொருட்டுநயந்துநல்லோர்,
மேன்மாற்றமுறைப்படி பூசிப்பதுகோயிலினுள்விளங்கிலிங்கம். ( )

அவ்விலிங்கஞ் சுயம்புகாணந்தைவிகமாரிடமா னுடமென்றைந்
தா,மிவ்விலிங்கவடிவாகுஞ்சிவபெருமான் றிருவடியையெய்துமார்க்க
ங்,கிவ்வியமாஞ்சரியைகிரியையோகஞான மெனத்திகழுநான்கா,மௌ
வியமில்லுருவடிவைநோக்கிச்செய்தொண்டுசரியையாமன்றே. ( )

கிரியையருவுருவடிவைநோக்கியகத்தும்புறத்துங்கிளருந்தொண்டா, மருவடிவைநோக்கியகத் தொழிலினற்செயும்வழிபாடதுவேயோகம், விரியுமறிவுத்தொழிலாலம்மூன்றுவடிவுக்கும்வேறாய்நிற்கும், பெரியசச்சிதானந்தவடிவினிடஞ்செயுந்தொண்டுபிறங்குஞானம். ()

எங்கும்வியாபகமாய்நிற்பினுமிலிங்க முதற்றிருமேனியுமெய்த்தொண்டர், தங்குதிருவேடமுமாமிரண்டிடத்துந்தயிரினெய்போற்றயங்காநிற்பர், பொங்குமருட்சிவபெருமான்பிறவிடமெல்லாம்பாலுட்புக்கநெய்போ, லிங்குவெளிப்படா நிற்பராதலினற்சைவசமயிகளெல்லோரும். (உகO)

இறையவனையிலிங்கமுஞ்சங்கமமுமா மிரண்டிடத்துமிறைஞ்சவேண்டுங், கறையறுமிம்முறைசரியைமுதலியநான்மார்க்கருஞ்செய்கடமையாகுந், தறையின்மலநீங்கியஞானிகளுமுந்துமாமலநோய்தாக்காமைக்கு, முறைமுறைமேன்மேற்சிவானந்தம்வளர்தற்குமிதுமுடித்தல்வேண்டும். (உகக)

உறங்குவர்கைப்பொருளவரையறியாதுநீங்குதல்போலுயர்வொப்பில்லா, வறங்குறிக்கொண்ஞானிகளுக்கிந்நான்குந்தாமேயங்ககல்வவன்றிக், கறங்குமனந்தவிருமவர்தாந்தவிர்ப்பாரலர்தவிர்த்தாற்கணக்கில்கால, மிறங்குநரகத்தினுள்வீழ்ந்திடுவரெனவுண்மைநூலியம்புமன்றே. (உகஉ)

ஒருபிரபுபணிகளுளுட்டொழில்செய்வோர்புறத்தொழிற்குமுரியராவர், மருவுபுறத்தொழில்செய்வோருட்டொழிலுக்குரியரல்லாவாறுபோல, வருவுருவமுருவருவமுடையபிரான்மேற்பணிசெய்வார்கீழுற்றுப், பெருகுபணிக்குரியர்கீழ்ப்பணிசெய்வார்மேற்பணிசெய்பெரியராகார். (உகங)

ஆனதனாற்றிருக்கோயில்கொண்டருளுஞ்சிவலிங்கவமலன்றன்னை, ஞானமாதியநான்கு திறத்தாரும்வழிபடனன்னடக்கையாகுந், தீனமிலாச்சிவாநுபூதிப்பெருவாழ்வுடையசைவாசிரியர்நால்வர், கூனன்மதிமிலைந்தானைத்தலந்தொறும்போய்ப்பாடிவணங்குவதுசான்றாம்.

அருண்மயமாஞ்சிவலிங்கவழிபாடொன்குபாதத்தாராலு, மருளற
வேசெயப்படுமோயினுமதவரவர்கருத்துவகையால்வேறு, மிருளுறுமம்
மிடற்றிறைவனருள்புரியுமுறைமையுமவ்வியல்பேயாகுந், தெருளுற
யாமவையெலாம்விரித்துரைப்பாமுதற்பாதச்செயலினின்றோர். ()

பகுத்தறிதலில்லாமற்சிவலிங்கமுதலுருவேபரமென்றன்பு, மிகு
த்துவழிபடுவரவர்க்கெம்மிறையுமருள்செய்யும்வெளிப்படாமற்,றொ
ருத்தவருவப்பொருளாஞ் சிவபெருமான் மந்திரத்தாற்றுகளிலாமன்,
வகுத்தசிவலிங்கமுதலியவுருக்கொண்டாரென்றுமனத்திற்றேர்ந்து.

மந்திரநியாசத்தால்வழிபடுவர்கிரியையெனுமார்க்கத்துள்ளோர்,
தந்திரயோகம்புரியுநெறிநின்றோர்யோகிகளிதயங்களெங்கு, மிந்தி
ரவியெரிவிழியாரிருத்தல்போலிதிலுமிருந்திடுவரென்று,*சந்திரமுற்
றிலிங்கமனதச்சாத்தியமந்திரத்திலருச்சனைசெய்வாரால். (௨௧௭)

இந்தவிருதிறத்தார்க்குஞ் சிவபெருமான் கடைந்தபோதெதிரிற்
றோன்றுஞ், செந்தழலுங்கறந்தபோதிற்றோன்றும்பாலும்போற்றிகழு
மவ்வம், மந்திரங்களாலவ்வவர்விரும்புவடிவாயவ்வச்சொரூபத், தந்த
முறவவ்வப்போதேதோன்றிநின்றுதமதருள்செய்வாரே. (௨௧௮)

ஞானிகளிம்முத்திறத்தாரும்போலோரிடமாகநாடிடாமன்,மேனி
றையுமன்பின்மாத்திரையங்கேவழிபடுவர்மிகவவர்க்குத், தேனிறை
யுங்கொன்றைமுடிச்சிவபெருமான் கன்றைநினைந்திடுந்தாயான, வா
னின்முலைப்பால்போலங்கவ்வன்பேதாமாய்நின்றருள்செய்வாரே. ()

பகரும்விதியினுவாகபரஞானமெனுமநுபவஞானத்தைச், செ
கமதிலோராதிருந்தமபரஞானம்மெனுஞ்சாத்திரஞானத்தை, நிகழ்கு
ருசந்நிதியிற்போய்ப்பெறாதுஞ்சிற்சிலர்தமைஞா னிகளென்றோதிப்,
புகழ்சரியாதியையிகழ்ந்துபொங்குமெரிவாய்நரகிற்புகுகின்றாரே. ()

---

சம் - அன்பு.

தேசியன்ஞானத்தின்மிகுந் திடமுத்தி நெறியுமதைத்தெளிந்து செப்பு, மாசிரியர்தம்முளுயராசிரியரும்மிலையாலவர்தம்முள்ளும், பூசியவெண்ணீறியலுஞ்சமயதேசிகருயர்ந்தபோதமுள்ளோர், மாசிலரவர்திருவாக்கால்வருந்தேவாரதிருவாசகங்கள். (கூ0க)

அதிதூர்த்தன் றனைப்புகழ்ந்து தன்னுற்சொல்வாக்கினிலு மதிகந்தன்பாற், பதிகாமக்கிழத்தியர்வாய்த் தோன்றியவாக்கினில் விருப்பம்பற்றுமாபோன், மதிசூடுஞ்சிவபெருமான் றமைப்புகழ்ந்துதம்மாற்சொன்மறையினுஞ்சேர்த், துதிபுரியுந்தொண்டர்வாக்கிவையென்றுமிக விருப்பஞ்சுரந்துகொள்வர். (கூ0உ)

ஆதலினூற்றிருப்பதிகம்பெற்றசிவதலங்களுயர் வவையேதேனு, நோதகவுற்றிடிற்றீர்த்தன்மிகுந்தசிவதருமமென நூலின்மேற்கோள், போதவெடுத்துக்காட்டிப்பூசைமுட்டுப்பாடேற்றூற்புக்கதாகுந், திதனைத்துங்காட்டியவைதவிர்ப்பவர்தம்பெரும்பயனுந்திரட்டிச்சொல்லி. ()

பேரவையில்வந்திருந்தோர்யாவருக்குஞ் சிவதருமம் பெரிதென்றன்பு, சாரவையமேதுமின்றிப் பிரசங்கஞ்செய்துமுடித் தனரதன்பின், சீரவையிங்ஙனஞ்சென்னுட் சென்றபின் கூடவு மதற்கோர்திலகம் போலப், பாரவையம்புகழ்தருநாவலரிருந்து போதித்தபடியைச் சொல்வாம். (கூ0ஈ)

இன்பமதிலேவிருப்புந்துன்பமதில்வெறுப்புமுயிர்க்கியற்கையேனு, மின்பமிதுதுன்ப மிஃதென்றுணர்ந்து துன்பத்தி னெல்லைநீங்கி, யின்பமுறுநெறியிஃதென்றுள்ளபடியறிந்ததனையெய்துதற்கு, மின்பமுறுசுதந்திரசத்தியையுடையதல்லவஃ,திறைவற்கெய்தும். (கூ0ரு)

உயிர்பரதந்திரமுடையதிஃதறிந்தெம்பிரான்வழியி னொழுகினன்றிச், செயிருறுதுன்பமுமின்பமுந்தெரிந்துதுன்பத்திற்றீர்ந்தின்பத்திற், பயிலுவதற்கியலாவாதித்தியமாகியபேரின்பந்தான்யாதேற், றுயிலும்விழிப்புங்கடந்தமுத்தியொன்றேபிறவெலாந்துன்பமன்றே. ()

பழியிலருட்சிவபெருமான்றனையடைதலவரைவிதிப்படியன்பா
க, வழிபடலவ் வழிபாட்டுக்கேதுசிவஞானமிந்த வழிபாடொன்றே
யொழிவின்முத்திவீட்டுக்குவாயில் சிவஞானமேழுறுபகுப்பா, மொ
ழியின்மூன்ருந்தீக்கைபெற்றபின்புசிவஞானமூந்துநூலாம். (௧௦௭)

உயர்சைவசித்தாந்தசாத்திரங்களோதலோடோதுவித்த, லயர்வி
லவற்றின்பொருளைக் கேட்டல்கேட்பித்தல் கேட்டதைச்சிந்தித்தல்,
செயறெளிதறெளிந்தபடியே நிட்டைசேர்தலிந்தச் சிவஞானத்துக்,
கியலுறுமேதுக்கள்சிவாகமத்தில்விதித் திடுஞ்சரியாதியமூன் றென்
னும். (௧௦௮)

சிவதருமமாமிருதிபுகல்யாகமுதலியவைசிவதன்ம, முவமையி
லாயோகமின்றிஞானமுநற் கிரியையின்றியோகந்தானு, மவமகலுஞ்
சரியையின்றிக்கிரியையுங்கைகூடாவாமஃதுநிற்க, தவமலியுஞ்சரியை
முதலியநான்குந்தரும்பலன்கள்சாற்றக்கேண்மின். (௧௦௯)

ஒளிர்சிவசாலோகசாமீபசாரூபசாயுச்சியங்கண், மிளிர்மகமாதிய
பசுபுண்ணியங்களோசுவர்க்கத்தை மிகவுநல்குங், களியுளங்கொண்டி
வைகளெலாமுணர்ந்துணர்ந்தபடிநடத்தல்கல்விகேள்வித், தெளிவு
மிகுதியினன்றிக்கூடாவாமிதுகூடுஞ்செய்கையாக. (௧௧௦)

பெரிதும்வித்தியாசாலைதாபித்தலொடுசைவப்பிரசங்கங்க, டெரி
தரச்செய்வித்தலுமேமிகச்சிறந்தபுண்ணியமிச்செய்கையாலே, யரியசி
வதருமமொடுசிவஞானமபிவிருத்தியாகுமென்று, விரிவுறுநூன்மேற்
கோள்கள்பலகாட்டியாவருக்கும்விளங்குவித்தார். (௧௧௧)

பின்னரும்பற்பலவாறுபயனடையச் சிவதருமப்பெற்றிகாட்டி,
யென்னருமுட்களிப்புறநற்பிரசங்கஞ்செய்துமுடித் திட்டாரிப்பான்,
மன்னரின்மாசறக்கற்றோர் சிறப்புடையரென்பதுநா வலர்பாற்கண்
டே, முன்னருமற்புதமென்று துதிகள்பேரவையுளோ ருரைத்துச்
சென்ருர். (௧௧௨)

அப்பாற்சந்தானுசாரியராகுந் தில்லைவாழந்தணர்க்கு, ளொப்பாருமிலாதவு மாபதிசிவாசாரியர் தம்முண்மைவாக்குத், தப்பாமற்செய்கோயிற்புராணத்துக்கினியவுரைதாமேதீட்டி, யெப்பாரும் புகழவச்சிற்பதித்துவெளியேற்றினாரிதற்குமேலும். (ருகஙா)

அமைதருசீர்மறைஞானசம்பந்தசிவாசாரியார்செய்சைவ, சமயநெறிக்குரைசெய்து பதித்துவெளிப்படுத்தியபின் றமிழ்வல்லோர்க்கோர், சிமையமெனவோங்குதொல்காப்பியச்சேனாவரையஞ் சோதித்தச்சிட்டு, கமைமிகர்வாருந்தஞ்சீர்தெரியவிஞ்ஞாபனம்பலவுநடாத்தினாரே. (ருகச)

இன்னணஞ்சில்பகல்கழிந்தபின்னர்யாழ்ப் பாணத்துக்கேகவேண்டிச், சென்னைநகர்விட்டகன்று ஞானநடராசர்திருத்தில்லைசேர்ந்தா, ரன்னபொழுதிராமலிங்கபிள்ளை நண்பர்பலரையுமங்கடுத்துநம்மான், றன்னருளாற்சமயவாதஞ்செய்து வெற்றிகொண்டதற்குப்பின்னர். (ருகரு)

வேறு.

ஒல்லைசென்றுமாயூரமுற்றங்குளாருவப்ப
வெல்லையில்லருட்சிவபிரான்மகிமையுமிவர்வாய்த்
தொல்லையாகமவேதத்தின்மகிமையுந்தொண்டு
வல்லைசெய்பவரெய்துறுபெரும்பயன்வளனும். (ருகசு)

பிரமன்மான்முதற்றேவர்கள்யாருமெம்பிரான்பால்
வரமநேகமுன்பெற்றகாதையும்பலவாறு
தாமுறும்பிரசங்கங்களாற்சொலிச்சங்கார்
காமுளோன்பதியவனெனவேதுக்கள்காட்டி. (ருகஎ)

அன்னவன்னுபமன்னியமாமுனியருளா
லுன்னருஞ்சிவதீக்கைபெற்றதுமுதலுள்ள
வென்னசான்றுமங்கெடுத்தெடுத்தோதினரெவரு
மின்னலைவமறுத்திடப்படாவெனச்சிரத்தேற்றார். (ருகஅ)

எற்றபின்பவர்போயபின்னித்தலமிகந்து
மாற்றருஞ்சிவசமயமேவளர்தருமபுர
மாற்றலாந்திருவிடைமருதூர்பிறையாறு
சாற்றுசீர்மலிகாரைக்காலாதியதலங்கள். (௧௧௯)

சென்றுசென்றுயர்சிவபிரான்றெரிசனஞ்செய்து
நன்றுறும்பிரசங்கமுமியற்றுபுநன்மை
துன்றுமாமறைக்காட்டிலேயடைந்தனர்தூயோ
ரென்றுமுள்ளவரெனும்புகழ்பெற்றிடுமிவரே. (௧௨0)

அத்தலத்துளசிவாலயதருமகர்த்தாவாற்
சித்தநட்புடன்வேண்டவேவார்பிரசங்கஞ்செய்து
பத்தரிற்சிறந்திட்டநாவலரும்யாழ்ப்பாணத்
துத்தமச்சிவனடியவரெதிர்கொளவுற்றார். (௧௨௧)

வாடுறும்பயிர்செழிப்புறமழைபொழிவான்போற்
றேடபற்பலசனங்களுட்டெளிவுறுந்திறத்தாற்
பாடுறந்திரிபதார்த்தலக்கணமெலாம்பகர்ந்தங்
கீடுவேறிலார்தம்மடத்திருந்தனரிப்பால். (௧௨௨)

அங்கண்வாழ்மறையவர்முதலறிவுளோர்யாரு
மெங்களுவலரிடத்தினிற்புறச்சமயிகண்முன்
றங்கள்பொய்ம்மதமெய்யெனச்சாற்றினர்தடுக்க
விங்கண்யாவருமிலரிதற்கென்செய்வேமினிமேல். (௧௨௩)

தங்கள்வித்தியாசாலையிலேபலநாளு
மெங்கண்மீதிரங்கிச்சைவப்பிரசங்கமிசைத்தா
ணங்கண்மம்மர்நோய்தவிர்ந்துயலாமெனநவின்றார்
மங்களம்பெறுபோதகாதுமனமகிழ்ந்தார். (௧௨௪)

அன்னதானஞ்செய்வானிடம்பசித்துவந்தடைந்தோ
ரின்னநீரெனச்சொல்லுமுன்னவன்றவிர்த்திடல்போற்

சொன்னபற்பலர்மனத்துயர்கெடச்செவித்துளைப்போய்
மன்னலாஞ்சைவப்பிரசங்கவமுதினைவார்த்தார். (௧௨௫)

ஆனதாலிந்தருந்திறனோர்சைவநூலறிந்த
ஞானமிக்கவராயினரீழநன்னாடு
தானடைந்ததேதவமெனத்தக்கபோதகர்க்குப்
போனவாயுளிருபதோடேழெனப்புகல்வர். (௧௨௬)

இந்தவாறுசைவப்பிரசங்கமுமியற்றோர்ந்
துய்ந்தநற்றமிழ்க்கழகமுநடாத்துநாளுயர்ச்சி
தந்தவந்நகராங்கிலவித்தியாசாலை
வந்தசைவமாணவர்சிலர்வந்துநாவலர்பால். (௧௨௭)

ஐயயாந்திருநீறணிந்தேகினலந்தோ
வெய்யபாதிரிவெருட்டுகின்றனன்செய்வேமீர்
செய்யலாவதேதெனிலெமக்கின்னருள்செய்து
மெய்யருச்சைவவங்கிலவித்தியாசாலை. (௧௨௮)

ஒன்றுதாபிக்கவேண்டுமென்றிரந்திடவுள்ள
நன்றுபூரித்துநாவலரங்ஙனநடாத்தற்
கன்றுவேண்டியமுயற்சிசெய்தமைத்தனரதன்மேற்
பொன்றுமாறிங்கோப்பாயொடுபுலோலியாம்புரத்தும். (௧௨௯)

தக்கசைவமேவிளங்குறும்வித்தியாசாலை
மிக்கநன்பொடுதாபித்துநடாத்துநாண்மேனாட்
டொக்கவின்னருள்புரிகுநர்க்கந்தசுவாமி
புக்கவாலயத்தாரழைத்திடவங்கட்போந்தார். (௧௩௦)

போந்தபின்னரச்சிவாலயஞ்சிவாகமப்பொருந்தா
திர்ந்தயாவையுந்தவிர்த்திடும்படிசொலித்திருத்தி
யாந்தமிழ்ப்பிரசங்கத்தாற்றிரவியமனேக
மாந்தர்பற்பலர்கொடுவந்துகொடுத்திடவாங்கி. (௧௩௧)

செய்யவேண்டியதிருப்பணியாதியசெய்வித்
துய்யவேயசப்பலியினையொழித்தனரொளிர்வே
லையர்பூசனையாகமவிதிப்படியமைத்து
வையகம்புகழ்சைவபோதகரங்குவாழ்நாள். (௧௧௨)

முயலுமாணவர்தங்களைப்படிப்பித்துமுதலுக்
கயலியற்றொகைச்சைவவினாவிடையரிய
செயலிலக்கணச்சுருக்கமாதியநன்னூல்செய்து
முயலுறச்சிவஞானபோதத்தின்சிற்றுரையும். (௧௧௩)

சிவநிசிப்புராணமும்பரிசோதனைசெய்தங்
குவமையற்றிடவாழ்வர்தம்வயசைம்பத்தொன்றா
மிவரதற்பினல்லூர்க்கந்தசாமிகோயிற்றெற்
கவமகன்றவீதியிலுளமடத்தினையடைந்து. (௧௧௪)

அம்மையார்திருமுலைசுரந்தளித்தபாலருந்தி
மும்மையையமுமுய்யவேபாடியமுதற்பாச்
செம்மைமாமறைப்பொருளெலாம்யாவருந்தெளிய
நம்மையுங்கதிக்கீர்த்திடுபிரசங்கமின்று. (௧௧௫)

மேற்குறித்தவேற்படையுடைவிமலனார்விழவி
லார்க்குமுள்ளன்புவரும்படிதுறைசையாதீனத்
தோர்க்குளேயுயரோதுவார்பலர்வரவுஞற்றி
யேற்குநல்விழாக்கொண்டருள்வீதிகளெங்கும். (௧௧௬)

நீறுகண்டிகைபுனைந்தவராகிப்பின்னின்று
தேறுமூவர்தேவாரங்கள்பாடச்செய்யுந்
தோறுமற்புதமெய்திவேதியரெலாஞ்சுருதி
வேறுவேறுநின்றோதினர்கண்டவர்வியப்ப. (௧௧௭)

இன்னவாஞ்சிவவேடத்தின்பொலிவொடுமெங்கு
மன்னலாந்திருக்கூட்டத்தின்சிறப்பைநம்வாக்கா

லென்னைசொல்வதுஞானசம்பந்தரோடெய்தி
முன்னருற்றவெண்ணிராயிரர்சிறப்பினுமுந்தும். (௩௩௮)

சிவாகமப்படிதிருவிழாமுடிந்தபின்சித்தத்
தவாமிகுத்துறைகடமொடுதிருவிளையாட
றவாவிருத்திநன்னூன்முதலியதிருத்தஞ்செய்
துவாவருட்சிவார்ச்சனையநுட்டானஞ்செய்யொழுங்கு. (௩௩௯)

திதிசெய்தேசிகன்சீடன்செய்விதிமுறைச்சிறப்பு
விதிதருப்பணம்போசனஞ்சிராத்தஞ்செய்விதியோ
டதிகமாந்தமிழ்வடமொழியினிலகராதி
புதிதுதீட்டல்போதித்தலிற்போக்கினர்போழ்து. (௩௪0)

புல்விற்பத்தியோர்பேரறிவடைந்திடும்புலோலிக்
கல்விச்சாலைமாணாக்கரைச்சோதிக்கக்கருதிச்
சொல்வித்தைக்கடலானவர்சென்றனர்தூய
பல்விற்பன்னரும்பாடினரிவர்புகழ்பரவி. (௩௪௧)

அந்தக்காலத்தின்மழைகுறைந்திட்டமையானே
யெந்தத்தேசமும்வற்கடமெய்தியதிதுகண்
டிந்தத்தேசத்திலேழைகட்காப்பமென்றெண்ணிச்
சொந்தக்கைப்பொருளாற்கஞ்சிவார்ப்பிக்கச்சொன்னார். (௩௪௨)

விரைவிற்பஞ்சநீங்கிடுதலில்லாமையான்மிக்க
பிரபுக்கட்கிதுபேசுவான்பிரசங்கம்பெரிதொன்
றராவிற்செய்தவரவர்கடந்திடும்பொருளுவந்து
தராவிற்சம்புவின்னருளெனக்கூறியன்னஞ்சமைத்து. (௩௪௩)

வந்தவேழைகள்பசிப்பிணிமுழுவதுமாற்றி
யெந்தவேளையுஞ்சிவகாருண்ணியமியைந்தா
ரிந்தவாறுசின்னாட்செலப்பின்னுமங்கேகி
யந்தமாணவர்தங்களைப்பரீக்ஷைசெய்தனரால். (௩௪௪)

செய்தபின்பருட்சிவசைவப்பிரசங்கஞ்செய்வார்
பொய்தழைந்திடுபுறச்சமயத்தினிற்புக்க
மெய்தவிர்ந்தசெட்டிச்சியாங்கண்ணகிமின்னை
யுய்தல்செய்திடுமொருதெய்வமெனவணங்குதலும். (௫௬௫)

அவட்கிரண்டுபக்கத்திலுஞ்சிவகுமாரரைவைத்
திவட்குநேரெனப்பூசைசெய்திடுதலுமிங்ஙன்
சிவத்துரோகிகள்பயனடையாரிவைநீங்கென்
றெவர்க்குங்காட்டுமோர்பிரசங்கமழைபொழிந்திட்டார். (௫௬௬)

இம்மழைக்குநேரொருபெருமழைபொழிந்திட்ட
மைம்மழைக்குலமூலகெலாஞ்செழித்தவம்மழையா
லம்மனைக்குவாய்திறந்தவன்காணுதற்கரியார்
தம்மழைக்குமின்னருள்சமீபிக்கவச்சமையம். (௫௬௭)

பந்தநீங்குநாவலரவணகன்றியாழ்ப்பாணம்
வந்தபின்சுரம்பீடிக்கத்துயர்சிலமருவு
மந்தவேல்லையிற்றரிசிக்கவந்தவரநேக
ரிந்தநோவடைந்தீரெனத்தமைக்குறித்திரங்க. (௫௬௮)

தெரிந்துஞானநாவலரவர்தமையெலாந்தேற்றிப்
பரிந்துபேசினர்சரீரமில்லாமையைப்பற்றிப்
பிரிந்துபோனதாற்சுரமுஞ்சின்னாளினிற்பின்பு
விரிந்துநீண்டவேணியன்புகழேவிளைவித்தார். (௫௬௯)

புனற்றடாகத்தின்ஞானமுண்டவர்குருபூசைத்
தினத்திலோர்சைவப்பிரசங்கஞ்செய்தனர்திகழ்விற்
பனத்திலோங்கியசனங்களைப்பார்த்துரைபகர்வார்
மனத்திலேனுங்கைம்மாறுசற்றெனுமுருவண்ணம். (௫௭௦)

## வேறு.

உயருநஞ்சமயத்தோரோடும்புறச்சமயத்தோரோ
டயர்பெரும்பகையெடுத்தேயாறைந்தோடிரண்டாண்டாக

வியல்சைவசமயத்துண்மையெங்கெங்கும்போதித்தேனியான்
மயராறுமெனக்குப்பின்னேவளர்சைவமறையுமென்று. (௯௫௧)

பாதிரிமாரெஞ்ஞான்றும்பகர்கின்றாரதனாலென்போற்
போதியாநிற்போர்தம்மைப்பூவில்யான்பொன்றுமுன்ன
நீதிநன்னெறிநின்றோங்கநேடுவீர்நீவிரெல்லா
மோதியவையவைக்கேட்டுமுளஞ்சினமுறாதுங்கட்கே. (௯௫௨)

தருமநின்றோங்குஞ்சைவசமயபோதனைசெய்தக்கோ
ரொருவரும்வராரென்போலவுயரறிவுடையாரென்றிவ்
விருநிலத்துள்ளசைவரெவருமீடேறவந்த
குருவெனுநாவலோர்தாங்கூறினரன்புகொண்டு. (௯௫௩)

எனக்குப்பின்சைவமெவ்வாறிருக்குமோவென்றெண்ணி
மனக்குத்துன்பெய்தவேநாவலரிங்ஙன்வாடுநாளி
லினற்குட்புக்கழுந்தவென்போலியற்றமிழ்வாணர்யாரு
முனற்குப்போந்தியற்றும்பாவமுதிர்ச்சியின்முடிவினாலோ. (௯௫௪)

புறமதப்பதகர்செய்தபுண்ணியத்தாலோபூசைத்
திறமுறைசிவாலயத்துட்டிறம்புநாள்சேர்தலாலோ
வறமுறுசைவநன்னூலடங்குநாளடுத்தலாலோ
வுறவுறுமடியார்பத்தியுறாதநாளுறுதலாலோ. (௯௫௫)

தொல்விலக்கணமுமேலாச்சொல்லிலக்கியமுந்தோன்ற
நல்விலக்குரையெய்தாதநாள்வருநவையினாலோ
சில்லியற்புலவரெல்லாஞ்செருக்குநாள்சேர்தலாலோ
புல்லியற்பரும்போதிக்கப்போதுநாள்புகுதலாலோ. (௯௫௬)

பாவினாலெடுத்துச்சொல்லப்படாப்பிறபலவற்றாலோ
யாவிசோர்வுறுமாறாகவசௌக்கியமதுகொண்டார்தந்
தாவிலாப்பூசைசைவாசாரியர்தம்மாற்செய்வித்
தோவிலாதைந்தெழுத்துமுன்னிநாவியங்கவோதி. (௯௫௭)

அருகுநின்றோர்தேவாரமாதியவருட்பாவெல்லா
முருகுமாறோதச்சொல்லியோதும்போதொளிருந்தில்லை
முருகுலாங்காச்சூழ்காசிமூதற்றலநீறுள்ளன்பு
பெருகுமாறணிந்துகண்டிபேணுபுபெரிதும்பூண்டு. (௬௫௮)

கங்கையினின்றும்வந்தகங்காத்தாளுட்கொண்டே
யங்கைகள்சிரசிற்கூப்பியாருயிர்க்குயிராவுள்ள
செங்கைமான்மழுவார்செய்யதிருவடிகளிலேசிந்தை
சங்கையில்லாமல்வைத்துத்தமையுணர்ந்தவரிற்சார்ந்தார். (௬௫௯)

பகர்வயசைம்பத்தாறும்பதினொருமதியுமான
விகல்பிரமாதிதேளிலிருபத்தொன்றாயதேதி
புகலுறுமகநாட்புக்கபுண்ணியகாலம்போதந்
திகழ்நடராசர்தங்குஞ்சிதபதநீழல்சேர்ந்தார். (௬௬0)

அன்றுசுக்கிரவாரத்தோடரியசத்தமியுங்கூடி
யொன்றுறுமிராக்காலத்திலுதித்தநாழிகையோரீரைந்
தென்றுசொல்லுவர்கண்டோர்களின்னநாவலரேறிங்ஙன்
பொன்றினரெனினும்பொன்றார்பொன்றலில்புகழாலென்றும். (௬௬௧)

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.

முற்றிற்று.

ஶ்ரீ @ ஶ்ரீ

# ஆறுமுகநாவலரவர்கள் ஶ்ரீசிதம்பர நடராஜப்பெருமானுடைய குஞ்சிதபாத நிழலை யடைந்தபொழுது பல வித்துவான்களாலுஞ் சொல்லப்பட்ட செய்யுட்கள் வருமாறு.

சென்னபட்டணம் ம-ா-ா-ஶ்ரீ,

## சி. வை. தாமோதரம்பிள்ளை.

### விருத்தம்.

வேதம்வலிகுன்றியது மேதகுசிவாகமவிதங்கள் வலிகுன்றினவ டற், சூதன்மொழிமூவறுபுராணம்வலிகுன்றியது சொல்லரியசைவச மயப், போதம்வலிகுன்றியதுபொற்பொதியமாமுனிபுகன்றமொழி குன்றியதுநந், நாதனிணைஞாலமிசைநாடரியவாறுமுகநாவலரடைந் தபொழுதே. (க)

### வெண்பா.

நல்லைநக ராறுமுக நாவலர் பிறந்திலரேற்
சொல்லுதமி ழெங்கே சுருதியெங்கே—யெல்லவரு
மேத்தும் புராணாகமங்க ளெங்கே ப்ரசங்கமெங்கே
யாத்தனறி வெங்கே யறை. (உ)

### சிலேடைக்கலித்துறை.

தகைசேர்தமிழ்க்குத்தனிமுதல்வன்கந்தவேள்குமா
னகுவேறலமிசையான்புலவோன்குருநல்லையறு
முகநாவலனரனார்க்கினியான்புகழ்மொய்ம்பனிம்ப
ரிகல்சூர்மதப்பகைசெற்றீசனருள்செய்தினனே. (௩)

### நக்ஷத்திரவெண்பா.

கார்த்திகை மாதத்துமகங் காசினிக்குச் சைவநிலை
சேர்த்திப் பரசமயஞ் சேதித்துச்—சீர்த்திமிக
மேவுதமிழ் தந்தசந்த வேணல்லூ ராறுமுக
நாவலர் வீடுற்ற திருநாள். (௪)

### குறள்.

நாயனார் நாற்குரவர் நாவலர்தென் ஞாலமுய்ய
மேயினா ரீசனருண் மேல். (௫)

---

உடுப்பிட்டி ம-௱-௱-ஸ்ரீ,

## அ. சிவசம்புப்புலவர்.

---

### நேரிசைவெண்பா.

தேவாரசு மெய்ந்நூற் றிறம்பலவு மாருயிருக்
காவலினாற் போதித்த வாறுமுக—நாவலனார்
சீர்முகத்தைக் கண்டவர்க டெண்டிரைப்பூ மண்டலத்தில்
யார்முகத்தைக் காண்ப தினி. (க)

கற்றார் பிறரெல்லாங் காசினிப்பொய் வாழ்விலைங்
குற்றார் செயற்பால வுன்றோராய்—முற்றார்
நயத்தகைய வாறுமுக நாவலனே யென்றுஞ்
செயத்தகைய செய்தான் றெளிந்து. (உ)

### எழுபத்திரண்டுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தருமேவுபொன் னுலகநிகரான நல்லைத்தலத் திலமர்சிந்தாமணி [வு
சாலப்பனாட்கந்தவேள்செய் துவைத்தவொண்டவலித்தின் வந்தவிளை
சான்றமதுரைச்சங்கமூன் றுமிங்கொன்றாய்த்தலைப்பட்ட பெரியசங்க
சம்புபூசாநியமமேத்தியனைட்டிகந்தவ றுமுப்பிரமசாரி [ஞ்
சமஸ்கிருதபாஷாவியாகரணசித்தாந்ததர்க்கவேதாந்தநிலையந்

தகையுறும்பதிபாசபசுலக்ஷணப்ரபலசைவாகமப்பொக்கிஷஞ்
சார்ந்தவர்தமக்கரியநுண்பொருட்சுவைதருஞ்சகலசாஸ்திரசாகரஞ்
சத்யசிவதர்மிணித்தீக்ஷாவிசிட்டவாசாரியசமூகதிலகந்
தண்டமிழ்ப்பரவையைமுகந்துயிர்ப்பயிர்களைத்தழைவித்தபருவமேக
தமிழ்நிலக்கனகவடபர்வதமுகட்டிற்றயங்குமாணிக்கதீபந் [ந்
தன்னாணைவழியினிற்பச்சைவநாட்டையொருதனிபுரந்திடுமெயரசு
தழனிரையவாய்ப்புகுத்திடுமிதரசமயத்தமத்தினைப்பருகுமென்றாழ்.
மருமேவுவெண்கமலவாணிநடமகலாமகத்வப்ரதாபமன்றம்
வழிவழித்தலைநின்றபரமாப்தபரசிவமதாசாரதெய்வசொருப
மாதவநன்மாணவகர்நெஞ்சகக்கோயிலில்வளர்ந்திடுஞ்சேமவைப்பு
மாணிக்கவாசகர்முதற்குரவரோடறிஞர்வாழ்த்தியேத்தியமெய்க்குரு
வாடும்பசிப்பிணிக்கறுசுவையுணாத்தினம்வழங்கிடுங்காமதேனு
வள்ளன்மையொழியாதிலங்குமாடம்பரமகாராசராசபிரபு
மதுரப்ரசங்கவமிர்தத்தினாலுலகத்தைவாழ்வித்தகற்பாத்திர
மாண்புபெறமுற்றியுணெகிழ்ந்தின்பமாமதுவழிந்திடும்பத்திக்கனி
வந்திரப்பவர்குறைகிளக்கமுன்வேண்டுவமகிழ்ந்துதவுபாரிசாதம்
வாலறிவினோருட்பாடனறவொழுகுறாஉமணிவளப்பூர்ணகும்ப
மண்டலமெலாம்பெரிதுமேற்கொளமெல்கிக்குளிருமங்களசுகந்தபுஷ்
வரசாதுசனசங்கபூச்யபூஷணநடுவில்வாய்ந்தநாயகரத்தினம். [பம்
கருமேவுமுயிர்களுக்கானந்தமெய்ந்நிலைமைகாட்டியதெருட்ப்ரகாசங்
கவினும்வீணாபுரமகீபதிசிரத்தினொளிர்காஞ்சனமணிக்கிரீடங்
கல்லூரியூர்தொறுமமைத்துச்சிறார்க்கினியகல்வியமுதூட்டுமன்னை
கற்பியல்வழாவகைநிரம்பியவியுற்பனக்கவிஞருக்கிருகண்மணி
காதலிற்பலகாலுமோடிமெய்க்கல்விக்கடற்கரைசள்கண்டவங்கங்
கங்காகுலப்புனிதக்ஷீரோததித்தலைக்காண்டகவுதித்தமதியங்
கலபமயிலூருமெம்மான்புகழ்ப்பணிகளமர்கதிர்செயுமணிப்பேடகங்
கலைஞராம்பொன்னுயர்வுதாழ்வுகடெரித்திடுங்காமரவரஞ்சியாணி
கலகப்பிரசங்கவிபசங்கமிடலெஞ்சிக்கலங்கச்செய்விசயசிங்கந்
கனிவுடைச்செந்தமிழ்க்கலைதலையெடுத்துக்களிப்புறச்செய்தவமூதி
கமையறிவடக்கமுதலாஞ்சிகரமுடனெழூஉங்கனசுகுணமாபூதரங்
காவலர்களேனையர்கள்காணிக்கையொடுநிதங்கைதொழுந்தேவாலயந்

திருமேவுமன்னவர்தமக்குமுத்யோகத்திறந்தேற்றுமதியமைச்சு
தேசாபிமானமுஞ்சமயாபிமானமுஞ்சிதையாமல்வாழ்ந்தவாழ்வு
சேர்ந்தவர்செயுங்குறையையன்றேமறந்திடுஞ்சித்தசுத்தியாளு
திகழ்நாதபரியந்தவிளைவெலாமுடியத்தெளிந்திடும்பெரியயோகி
தேற்றுறும்போதஞானியமசாமர்த்தியசிரேட்டசன்மார்க்கபீடந்
திரிபகலநூலுரைகள்பலவுலகுவந்திடச்செய்தவதியூகசாரஞ்
சிற்றம்பலத்தாடுமானந்தநாடகதியானபுண்ணியஸ்ரீ@
ஸ்ரீயாறுமுகநாவலன்வாசகானுபூதித்தகையசைவமுதல்வன்
செறிதரும்பிரமாதிவற்சரத்தேண்மதித்தேதியிருபத்தொன்றினிற்
செயசுங்கவாரமகநாளபரபக்கமூறுதிதியெனுஞ்சத்தமியினிற்
றேசோமயானந்தவாசாமகோசரதிகம்பரசமஸ்தசுராபூ
சிதவகிலசகதண்டநாதநித்தியசுத்தசிவபதத்தெய்தினனே. (௩)

## பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வடமேவுதுய்யமறையாகமவழக்கொடுநன்மக்கள்பயிறேசமதனில்
வளர்தவச்சாதியிலுதித்திராமதமுருமாபாக்யமாண்புகுலவித்
தரமேவுகலைமுழுதுணர்ந்துவாழ்வெனுமயற்சாகரந்தப்பிமிடியிற்
றளராதடக்கநிறைவாய்மைகொடையாதியதூஇயுயிர்கண்மாட்டன்புறீஇத்
திருமேவுமருணடப்பதிபாசபசுவியறெரிந்துமெய்ப்பத்திவாய்ந்து
சிவபூசைசெய்துதமிழ்நாட்டினைத்தனியரசுசெய்துபலநூல்பரப்பி
யுரமேவுசைவப்ரசங்கஞ்செய்திளைஞர்கட்குணர்வுதருகழகநிறுவி
யோங்குபுகழாறுமுகநாவலன்பெற்றவுயர்வொருசேரயார்க்குமிலையே.

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஓங்கியதொல்காப்பியத்திற் குரைமுன்செய்தவுவப்பினுற்சிலரு
ரையாசிரியனென்ன,வாங்கிளம்பூரணனை வியந்துரைத்தாரன்றேனவ்
வுரையுமிழிவின்கணமைந்ததம்மா,தாங்குபுகழ்நாவலனுஞ்சிறப்புப்பே
ராற் றன்னியற்பேருலகமெலாந்தழைக்கநின்ற, வீங்கிவன்செய்நூ
லுரைகள்பலசற்றேனுமிழிவின்கட்படுவவென்றியாரியம்புவாரே. (௫)

வெண்ணீறுங்கண்டிகையும்வெண்பொற்றூசும்வெண்ணகையு
ம்பவித்திரமும்விளங்கக்காட்டி, யுண்ணீடுபத்தியினர்போலிங்குள்ள
வொருசிலர்தாமுரைக்குமொழியுவந்துகொள்ளே, மண்ணீடுபுகழ்த்
திருநாவலனார்சொல்லும் வாசகங்களவையவையே வையமுய்யப்,
பண்ணீடுமொழிபங்கன்பகர்ந்தவாக்காப்பணிந்துகொள்வேமிதுநமக்
குப்பயன்பட்டன்றே. (௬)

வித்தகமெய்ந்நூலுரைகடுகளிற்பல்கி விராய்க்கிடந்துவரம்பிகந்த
விதங்கள்பல்வே, றத்தனையுமேடுகளின்முன்னர்க்கற்றவாசியர்பெரி
துணர்வரவைநன்றாராய்ந்து, சுத்தமுறத்திருத்தியச்சிலிடுவித்தியார்க்குந்
தொலைவிலுணர்வுதிப்பித்தான்றொல்லைச்சீர்த்தி, யுத்தமநாவலனவன்
போலவற்றையெல்லாமுய்த்துணர்ந்துதிருத்தவல்லாருலகத்தியாரே.

கட்டளைக்கலித்துறை.

மறையோரருட்சைவதேசிகர்பாவலர்வாழ்ந்தனர்நூற்
றுறையோடுசைவந்தலைசாய்ந்திடக்கண்டுதூங்கினர்நா
விறையோனொருதனியேயின்றவற்றையெழுப்பிநீஇக்
குறையோவறவைத்ததற்கென்கைம்மாறுகொடுத்தனரே. (௮)

பாவலர்பற்பலர்செல்வர்கள்பற்பலர்பாரடங்க
மேவினரேனுமவராலுலகுக்குமெய்ப்பயனென்
னாவலனாலிங்குநாளுக்குநாள்வந்தநன்மையெலா
மேவருந்தேர்வரிவன்போல்வருபவர்யாரினியே. (௯)

என்பிரபந்தங்கள்கேட்டுப்புலமையிருஞ்சிறப்பீந்
தன்பிரியாமற்பரிசுசெயுமென்றறைந்தெவர்க்கு
நன்பிரியத்திற்றலைமையெல்லாந்தந்தநாவலனா
ரின்பிறவாநிலத்துற்றாரினித்துணையாரெமக்கே. (௧0)

ஆரூரனில்லைப்புகலியர்கோனில்லையப்பனில்லைச்
சீரூருமாணிக்கவாசகனில்லைத்திசையளந்த
பேரூருமாறுமுகநாவலனில்லைப்பின்னிங்கியார்
நீரூரும்வேணியன்மார்க்கத்தைப்போதிக்குநீர்மையரே. (௧௧

புல்லரையேயுள்ளசொற்பொருள்யாவும்புலவர்தெரீஇ
நல்லனவாகப்புனைந்துவிட்டாரினிநாமென்செய்வேந்
தொல்லியலாறுமுகநாவலனைச்சுருக்கமறச்
சொல்லியநாமகட்கெண்ணமுண்டேயென்றுஞ்சொல்லுகவே. (கஉ)

---

கும்பகோணம் ம-ா-ா-ஸ்ரீ,

## பூ. முருகேசபிள்ளை.

---

### வெண்பா.

ஆறுமுக நாவலனை யாருமுணராப் பொருளைத்
தேறுமுகங் கொண்டு தெளிந்தானை—யாறுமுக
மென்றிருக்க வோர்முகமு மெங்களுக்குத் தோற்றுமற்
றென்றருளித்தா னந்தோ சிவா. (க)

காணுங்கண்ணின்று மொன்று கண்டுகொண்டோ மென்றியாழ்ப்
பாண மகிழும் பருவத்திற்—றூணுவெனுஞ்
சங்கர பண்டிதன்முன் சாய்ந்தான் பின்றாறுமுகப்
புங்கவநீ யும்மறைந்தாய் போய். (உ)

ஆறுமுக நாவலனென் றூலெவரு மன்புகொண்டிங்
கேறுமுக மாயெம்மை யேற்றுவந்தா—ராறுமுக
நாவலனே யின்னினியே நம்மையொரு நாயென்றும்
பாவனையும் பண்ணார்கள் பார். (ங)

திங்களணி செஞ்சடையான் றேவனென வந்ததுவு
மங்கவனூ றூலா யமர்ந்ததுவு—மெங்குமிசை
கொண்டியாழ்ப் பாணங் குலாவியது மாறுமுக
வண்டர்பிரான் வந்தபின்பே யாம். (ச)

ஆரிருந்தென் னூர்சிறந்தென் றாறுமுக நாவலன்போ
லாரிருந்து போதிப்பா ரையையோ—வாரணிந்து
தேக்குமதிச் செஞ்சடிலத் தேவுருவு கொண்டாலும்
வாக்கவனைப் போல வரா. (ரு)

எவ்விடமும் நின்புகழே யெவ்விடமும் நின்பேரே
யெவ்விடமு நின்சொல்லே யெய்தியபோ—லெவ்விடமு
மெக்காலமுமில்லை யின்னினியார் நின்புகழ்க்குத்
தக்கார்சொன் னுவல நீதான். (சு)

கந்தவேள் செய்தவம்போற் காணுந் தவமுமவன்
மைந்தனு நாவலன்போன் மைந்தர்களுஞ்—செந்தமிழில்
வல்லவர்க ளன்னவன்போல் வந்திடுவதும் முலகி
லில்லையில்லை யில்லை யினி. (எ)

### கட்டளைக்கலித்துறை.

மாமிக்குங்கொண்டமருகிக்குஞ்சண்டையைமாற்றியிந்தப்
பூமிக்குட்கல்வியுஞ்செல்வமுஞ்சேரப்புலவரெவர்
தாமிக்கடைந்தவர்நின்றனைப்போலிந்தத்தன்மையினு
னீமிக்கவனல்லைநாவலனேயிதுநிச்சயமே. (அ)

### நிந்தாஸ்துதி விருத்தம்.

வாணிதனைவசப்படுத்திமலரயனைநான்முகனுய்மயங்கச்செய்து
பேணியவளடிபணிந்துபிரிவகற்றிப்புணர்ந்தவுனைப்பிரமந்தேர்ந்த
மாணியென்றுநீதியுளாரென்றுஞ்சொல்வகையெங்கேமாண்டநின்னைக்
காணுவதோவிறப்பதுவிங்காறுமுகநாவலனேகமிப்பதன்றே. (கூ)

---

நீர்வேலி ம-ா-ா-ஸ்ரீ,

## சிவப்பிரகாசபிள்ளை.

---

### தேற்றரவு வெண்பா.

ஐயவிரோ வையகத்தீர் நாவலன்றான் போயினனென்
றையனவன்முத்தி யடைந் தனனுன்—மெய்யே
நலமடைந்தா னென்றே நனிமகிழ்க யாரும்
பலபுலம்பி யென்னே பயன். (க)

### வெண்பா.

செய்யபிர மாதியினிற் றேள்பின்னூர் சத்தமியில்
வையமுயச் சைவம் வளர்த்தபிரான்—றுய்யபுக
ழாறுமுக நாவலன்ரு ஞஞ்சிவஞானத் தடைந்தான்
றேறுசிவ சாயுச்சியம். (௨)

---

ஆவரங்கால் ம-ா-ா-ஸ்ரீ,

## சு. நமச்சிவாயபிள்ளை.

---

### வெண்பா.

தேறுமுது சர்வகலை தேர்ந்த ஸ்ரீ@ஸ்ரீ
யாறுமுக சாமியே யப்பனே—கூறுமுதற்
சற்குருவே சீனியே சர்க்கரையே கற்கண்டே
யிக்குவலயம் விடுத்த தேன். (க)

ஈசனினிச் சைவநிலை யிட்டுவர யாரிடத்து
நேசமொடு வைப்பனதை நீயறிவா—யோசைத்
திருவாய் மொழிந்து திடமில்லா நாங்க
ளொருவாறுறச்செய்வாயே. (உ)

நல்லசிவநீதி நாட்டவுநாம் பேயர்சில
ரல்லவென்று தள்ளுவ தென்றுமென்று—வல்லபர
காயப் பிரவேசங் கண்டதினின் ஞேன்றியற்றத்
தேயத் தொளித்தாயோ செப்பு. (௩)

சற்குருவே மெய்த்திருவே தண்ணளியே விண்ணொளியே
சொற்கிருந்தா யெங்கிருந்தாய் சொல்லாயே—நிற்குமுணங்
குற்றமது செய்தேமோ கோடுநெறி பெய்தேமோ
பெற்றியது வந்து வெளிபேசு. (௪)

பண்டிதர்கண் மாண்பகலப் பட்டாரே பாரிடத்தின்
மண்டுகலை வாணியும்பின் வாங்கினளே—தொண்டரெலாந்
தம்மாவி யற்றூர்போற் சார்ந்தாரே யாறுமுகப்
பெம்மானே நீபிரிந்த பின். (ரு)

## ஆசிரியவிருத்தம்.

நாவலோரிறந்தாரென்றசொற்கேட்டுநாங்கண்மெய்மறந்தழுதே பின், ஆவலாய்ச் சடங்கண்டாறுவமெனவந்தடுத்தபோதருமவுனத் தே, தீவிரதரமாமலர்ச்சியோடிருந்துதேரினிற்றெருச்சென்றுசற்றே, தாவிலாச்சடத்தைமறைத்தனையையாதளர்ந்தனம்வெளிப்படுகுருவே.

நாவலிபொறுத்தநற்குணமலையேநாடெலாம்புகழ்ந்துநின்றேத் துந், தேவனே சிவநூற்பொருள்களைத்தேற்றித்தெட்சணாமூர்த்தியா யமர்ந்த, காவலனேயுன்கருணையைப்பிரிந்துகடையரேமிவ்வுடம்புட னே, சாவதில்லாமலிருக்கலேங்கண்டாய்சாற்றுவாநமதுசற்குருவே.

புத்தகத்தாலும் பூரணவொளியாம் போதமார்பிரசங்கத்தானு, மித்தரையுள்ளா ரெம்முடனறியவிலங்குகண்டிகைதிருநீறு, முத்த மசிவசின்னங்களினுண்மையுயர்சைவமார்க்கத்தினுண்மை, வித்தகத் திருவாய்மலர்ந்தருள்புனிதாவிட்டதென்னெம்மைச்சற்குருவே. (அ)

யார்பிறந்திருந்து மெதைப்படித்துஞ்சீ ரெவ்வரசெங்கிதிபடைத் துந், தேர்பிரபோதஞ் செப்பினுங்கொள்ளாச் சீரிலேமனங்கொண்டு தேற, மார்பினிற் றிருவைத்தோன்றெழுஞ்சிவனேவையகம்யாவுக் குங்கடவு, ணோர்பிறரிலையென்றுரைத்துப்பின்னெம்மைநீக்கியதற மதோகுருவே. (கூ)

பணச்செருக்காலும்பிறசெருக்காலும்பாதகர்சிலர்பொய்த்தமதங் களிணங்கியிவ்விந்துதேசத்திற்பரப்பியெம்மனோர்தமைவஞ்சியாமற், கணக்கறுபகைகள்வரவுமெண்ணாதுகளைந்தவைதஞ்சமாய்நின்றாய், த ணப்பறுதிடத்தாரெவரையத்தகையாத்தங்கவைத்தேகினைகுருவே.

மண்ணையும்வேண்டேம் பொன்னையும்வேண்டேமற்றையபொருளையும்வேண்டேம், விண்ணையும்வேண்டேம் வேறிடம்வேண்டேம்விளம்பரசாதியவேண்டேந், தண்ணளித்திருவாய்மொழியமிர்தத்தைத்தரும்படிவேண்டினந்தா, லண்ணலேபிழைப்பேமின்றெனினுலைவேமையகோவையகோகுருவே. (௧௧)

நால்வகைச்சாதி விருத்தர்நற்றருணர்நண்ணிக்கீழிருந்துகேட்டடங்க, நால்வகைப்பாதத்துள்ளும் வேண்டியதை நலம்பெறமேலிருந்தருளி, நால்வகைச்சொல்லாஞ்செந்தமிழ்நெறியேநாவலியுடனுரைத்தருளி, நால்வகையாமாச்சிரமநாட்டியதை நமக்கியாரினிச்செய்வார்குருவே. (௧௨)

உள்ளூறுந்துறவர்ச்சனைசெபதியானவுண்மையாரொருமரக்கலத்தா, லள்ளலங்கொடியவினைக் கடல்கடந்தின்படைத்திறவா திறந்தாயைத், தெள்ளுபட்டணத்தெம்மடிகண்முன்னறந்தானென்றிடுஞ்செய்யுளிற்புகழ்ந்தான், றள்ளரும்புலவரின்றென்னசெய்வார்சாற்றுவாய்மலர்ந்தெங்கள்குகுவே. (௧௩)

கண்ணினுண்மணியே கருதருமறிவே கருத்திருட்டெறுஞ்சுடரேநா, மண்ணினிற்காத்ததந்தைதாய்பிரியமாய்ந்திடுஞ்சிறுமகார்போலத், திண்ணமாமுன்னைத்தேடிக்காணாது தேம்பியேபுலம்பவுஞ் சிவணும், பண்ணவன்போலவெங்குநின் றும்வாய்பகர்ந்திடாய்ஞாயமோகுருவே. (௧௪)

நீறுருத்திராக்கமந்திரம்பூசைநித்தியகருமமாகமங்க, ளாறுளதீக்கைமறையருட்பாக்களறமிலக்கியவிலக்கணங்க, ளேறியதர்க்கமாதியவெல்லாமிசைசிவதர்மிணிதிலைகூடப், பேறியனின்றோ டொளித்திடாவண்ணம்பெருவரமுவந்துதாகுருவே. (௧௫)

துன்பெலாஞ் சகித்துச் சோதிசேர்போதஞ்சொல்லுவாரிங்கிலையெம்போ, லன்பரேயாமுமினிச்சொலோமெனமுன்னறைந்தனைபின்னுடல்விடுநா, ளின்படையருட்பாவோதுவாரோயவிம்மெனுங்குறிப்பிற்கைகாட்டிப், பின்புமோதச்செய்துடனகன்றுயிப்பெருங்குறிப்பறிந்திலேங்குருவே. (௧௬)

கலித்துறை.

செந்தமிழாரியமாம்பலபாஷையிற்சேர்ந்திருந்து
நந்துமகிலபொருளையும்வாரியிந்நாட்டகத்தோ
ருய்ந்திடக்காட்டியடக்கியநாவில்வல்லோர்மண்டையைச்
சிந்தவையோவெரித்தாயோசிவந்தசிவாக்கினியே. (கஎ)

பார்க்கும்பதிபசுபாசமெய்ஞ்ஞானத்தைப்பண்புடையார்
யார்க்கும்பெறப்புத்தகமாக்கியீந்துள்யமனடுங்கி
வேர்க்கும்படியுற்றநாவலர்வாழ்தினவேலைதனைத்
தூர்க்கும்வகையெங்குக்கற்றனையோசிவசூரியனே. (கஅ)

---

சுன்னுகம் ம-௱-௱-ஸ்ரீ,

அ. குமாரசாமிப்பிள்ளை.

---

**வெண்பா.**

செல்லும் பிரமாதி தேண்மதி மூவேழுபுகர்
புல்லபர சத்தமியிற் போந்தமகம்—நல்லதமிழ்ப்
பாவலராற் பாடப் படும்புகழா றுமுக
நாவலன்மோக் கத் தடைந்தாள். (க)

கலி வெண்பா.

பூமாது வாழ்வுசெயும் பொன்னகர மென்னுநல்லைச்
சீமான் சிவன்பாதஞ் சிந்தைசெயுங்—கோமான்
சகம்புகழுங் கந்தவே டன்னிடத்தின் முந்திச்
சுகம்பெறுமவ் வள்ளுவனூர் சொன்ன - மகன்றந்தைக்
காற்றுமுதவி யருமைத் திருக் குறளுக்
கேற்ற விலக்கியமா விங்குதித்துச்—சாற்றரிய
திண்மைபெறுஞ் சைவ சித்தாந்த சாகரத்தின்
றண்மை நலம் பருகிச் சைவமெனு - முண்மையுள
செஞ்சாலி யோங்கச் சிறந்த பிரசங்கமழை

யஞ்சாது பெய்யு மருண்முகிலே—மஞ்சாருஞ்
சோலைப் பெருங்காழித் தோன்றறிரு நாவலர்கோன்
வேலையிடைக் கல்லின் மிதந்து வந்தோன் - சீலமிக்க
வாதவூர் வந்தவன்றே வாரதிரு வாசகங்க
ளோதிச் சிவபெருமா னொண்கழற்செம்—போதைநினைந்
துள்ளநெக்கு நெக்குருக வோட்டந் துடிதுடிப்பக்
கொள்ள வுடம்பு குறுவேர்வை - வெள்ளமெனக்
கண்ணீர்சொரியமயிர்க் கால்சிலிர்ப்ப மெய்ந் நடுங்க
வெண்ணுத் தழுதழுப்ப வின்பவெள்ளத்—துண்ணு
மானந்த முற்றே யயர்த்துப் பரவசமாய்
மோனச் சிவநூன் முறைப்படியே - ஞானமுறச்
செய்யுஞ் சிவபூசைச் செல்வா சிறியேனுக்
குய்யு நெறிகாட்டு முத்தமனே—துய்யதமிழ்ப்
பாடை யிலக்கியமும் பன்னு மிலக்கணமுந்
தொடமறக் கற்றுணர்ந்த தோன்றலே - பீடுபெறும்
பன்னூற் கடல்கடைந்து பாலர்பெற வின்னமுதச்
சொன்னுடி நல்வசன சூத்திரமாச்—சின்னுளி
வித்தரையில் யாவர்செய்வா ரென்னப் பலப்பலவாம்
புத்தகங்கள் செய்தருளும் புண்ணியனே - பத்தியினர்
பாவந் தொலைத்தருளும் பஞ்சாக்கர விசிட்ட
மாவலொடும் பேசு மாறுமுக— நாவலனே
யாற்றகில்லே னாற்றகில்லே னந்தோ கினைதுபிரி
வாற்றகில்லே னாற்றகில்லே னார்க்குரைப்பேன் - சீற்றமுடன்
வந்த விடப்பனவன் வார்த்தைக் கொடுஞ்சரத்தா
னொந்தேற் கிரங்கியரு ளுக்கதனைத்—தந்தவனே
கூறும் பரசமய கோளரியே மெய்யுணர்ச்சி
தேறு நினதருமை சிந்திக்குந் - தோறுமெலா
மென்னை யயர்த்தே னெம்பெருமா னின்பெருமை
தன்னைப் பெருஞ்சேடன் றானிருந்து—பன்னாளாப்
பேசுகினு முற்றுப் பெறுமோ பெருந்தகையே
யீசன் பெருங்கருணை யிப்படியோ - பேசியென்ன

கண்ணே யெனதிரண்டு கண்மணியே நாவலனே
மண்ணாதி யாமுடம்பு மாய்ந்தாலு—மெண்ணாருன்
கீர்த்தி யுடம்பு கெடுமோ கிளக்குமுண்மை
வார்த்தை யரிச்சந்தர மன்னவனே - போர்த்தவிரு
ணீக்குங் கிரிவிளக்கே நின்னினெமக் கோர்குரவர்
வாய்க்குநா ளெந்நாளோ மற்று. (உ)

## கலித்துறை.

கல்விக் களஞ்சியங் கற்றவர்க்கேறு கருணைவள்ளல்
சொல்வித் துவப்பிர சாரகன்பூதி துலங்குமெய்ய
னல்லைப் பதியின னாறுமுகப்பெரு நாவலனுந்
தில்லைப்பதியி னடராசன் சேவடி சேர்ந்தனனே. (ங)

## முன் மடக்குப் பின்முடுகு வெண்பா.

சைவப்ர காசனர்க டம்வா யினிதடக்குஞ்
சைவப்ர காச வித்யாசாலைமன்ன—னுய்வடைந்தா
னர்க்கனக் கினிக்கணத்த னத்தமுத்த மிக்கருளும்
பார்க்கனக் கனக்கன் பதத்து. (ச)

## பின்முடுகுவெண்பா.

என்கடித மென்கவிதை யார்க்கு மினிதென்று
நன்குறவே பாராட்டு நாவலனு—ரெங்கேயோ
கங்கைமுடிச் சங்கரன்பொற் கஞ்சமலர்ச் செஞ்சரண்விட்
டிங்குவர வுங்கருத்தோ வென். (ரு)

## வினவுத்தர வெண்பா.

ஐந்தின்பின் னாவதென்ன வானனத்தின் பேரென்ன
மூந்து நடுவின் மொழியென்ன—விந்திரற்கு
மாறுகொண்டோன் பேரென்ன வாக்கின் மிகவல்ல
வாறுமுக நாவலனே யாம். (சு)

உஅரெருஅ ம-௩-௱-ஶ்ரீ,

சைவ உதயபானு பத்திராதிபர்

சு. சரவணமுத்துப்பிள்ளை.

---

ஆசிரியவிருத்தம்.

அருமறையாகமமூமுறைகளுலகிலோங்கவடியனுளத்தஞ்ஞானதிமிரநீங்கப், பெருமையொடுதவவிரதமுல்கோர்தாங்கப்பீடில்பரசமயகுழாமிரிந்தேயேங்க, வொருமையொடுநல்லைநகருதித்தேவந்தவுத்தமநல்லாறுமுகப்பெம்மானேநின், னிருமைபெறுதிருவாக்கினருமைதன்னையின்பமுடன்கேட்பதினியெந்தநாளே. (க)

சிவம்பழுத்தசெஞ்சுவையேதேனேபாகேதெவிட்டாததெள்ளமிர்தத்திரளேமேலாந், தவம்பழுத்ததனிவடிவேதிருவெண்ணீறுதயங்குதிருமேனியுடைக்குருவேமிக்க, வவம்பழுத்தபுறச்சமயதிமிரமோட்டியத்துவிதசுத்தசித்தாந்தத்தினுண்மை, நவம்பழுத்தபொருள்காட்டிச்சைவநாட்டுநாவலனேநினைக்காணுநாளெந்நாளே. (உ)

தேனூறும்வாசகமோராறுநூறுந்திருக்கோவையென்னுமகப்பொருள்சேர்செய்யு, ளூனூறுமுரைத்ததிருவாதவூரனுவலர்கோன்காழியர்கோனவ்வாகீசன், போனீறுமைந்தெழுத்துஞ்சைவநூலும்புவியினிடைநனிவிளக்கும்புனிதாமேலை, வானேறும்பொழினல்லைசேருநன்னாவலப்பெருமானினைக்காணுநாளெந்நாளே. (௩)

எத்திசையுங்கிரிதீபம்போலச்சோதியெறிக்குமருட்பிரகாசவள்ளாலின்ப, முத்திவழிக்குரியநெறியிதுதானென்றேழுநூல்கோருணரவதுமுறையேகாட்டிப், புத்தமிர்தமனையவருட்பாக்களோதிப்பூசனையீசனுக்கியற்றல்பொருளாக்கொண்டோய், நத்தமருந்தடநல்லைநகரில்வந்தநாவலனேநினைக்காணுநாளெந்நாளே (௪)

### வேறு.

செல்லூரும்புருகூடதன்சேணூடுபோல்விளங்குஞ்சீர்த்திமிக்க, நல்லூரினவதரித்தஞானகுருநாவலனேஞானமுய்ய, வெல்லாதசிவாகமத்தின்பொருளுணர்த்தும்வித்தகனேவிதுராகின்னே, யெல்லேமுமொருங்கிழந்தேமின்னுமுனைக்காண்பதுண்டோவென்செய்வேமே. (ரு)

### கட்டளைக்கலித்துறை.

நல்லூரில்வந்திடுஞானோதயகுருநாவலனே
வெல்லாதகல்வியுஞ்செல்வமுமேவினைமேதினியி
லெல்லாருமேத்திடநற்குணம்பூண்டனையென்பதனைச்
சில்லோரிவண்செயுங்கல்விச்செருக்கினிற்றேர்ந்தனனே. (சு)

முன்னாளிற்கம்பன்கவிகாளமேகமுதற்புலவர்
தந்நாவலிமையைக்காட்டினரேயன்றிச்சைவநெறி
நந்நாவலப்பெருமானுனைப்போனனிநாட்டினரோ
விந்நாளினும்புலவோர்திரிவார்பலரென்பயனே. (எ)

தேனோகனியோவெனவேசுவைக்குஞ்செழுந்தமிழிற்
றானேதனக்கிணையாகியுதித்துயர்சற்குருவாய்
வானோர்புகழ்நல்லைவந்தருணாவலன்வான்புகழை
நானோசொலவலன்சேடனுங்கூறிடநாணுவனே. (அ)

---

மல்வாகம் ம-ா-ா-ஸ்ரீ,

## சி. செந்திநாதையர்.

---

### வெண்பா.

வன்றொண்ட னாவலர்கோன் வாழ்வா வதுமாய
மென்றுரைத்ததேவாரத் தின் பொருளை—நன்றியுடன்
சிந்தைசெய்தே னாவலனே சேர்ந்தாய்நீ யென்பதனாற்
புந்திநொந்து துக்கமிக்க போது. (க)

நன்னடக்கைப் பத்திரிகை நாவலனே நீயனுப்ப
வென்னதவஞ் செய்தேனோ யானறியே—னன்னதனு
ளுள்ளசில வாசகங்க ளுற்றுணரும் போதெல்லாம்
வெள்ளம் பொழியும் விழி. (௨)

சுன்னைக் குமாரசுவாமியிடத் தோர் கடித
முன்னைக் குறித்தனுப்பி யுள்ளுவந்தே—னன்னதுன்பாற்
சேருமுன்ன நாவலனே சென்றாய் சிவலோகம்
யாரும் பதைபதைக்க விங்கு. (௩)

கட்டளைக்கலித்துறை.

தேவாரம்யான்சொலக்கேட்டுமகிழ்ந்துசிரத்தையுடன்
பூவாதிகொண்டுபுரிசிவபூசைப்பொலிவழகும்
பாவாணர்மெச்சச்செயும்பிரசங்கமும்பார்த்தினிநா
னாவாரவாழ்த்திகொளுமுண்டோநல்லநாவலனே. (௪)

---

கொக்குவில் ம-ா-ா-ஸ்ரீ,

ச. சபாரத்தினப்பிள்ளை.

---

கலித்துறை.

நாமகணாவிற்றுயிலுகையாலலர்நான்முகனாய்த்
தேமரைமாதிடஞ்சேர்தலினாற்றிருமாயவனாய்
மாமறையாகமபோதனையூட்டலின்மாணரனாய்ப்
பூமிசைமேவியநாவலபூபதிபோயினரே. (௧)

விருத்தம்.

சிவசமயகமலமதைத்தமிழ்நாடாந்திருமடுவிற்செறித்தலர்த்திப்
வமயறந்தாங்கணுற்றபரசமயவிருள்கடமைப்பதறவோட்டித்
வநெறியாந்தேரினிடைத்தனியூர்ந்துதற்பரனுமாழிசார்ந்தா
வமகலவுல்குபெறுமாறுமுகநாவலனுமனவியோனே. (௨)

திருநெல்வேலி ம-ா-ா-ஸ்ரீ,

## க. வேலுப்பிள்ளை.

---

### வெண்பா.

ஏறுபிரமாதிதனி னெய்து புகழ்க்கார்த்திகையிற்
கூறுபா சத்தமியாங் கோதிறிதி—வீறுமக
மாறுமுக நாவலனஞ் செல்வ மகிலகுரு
வீறுதிரு மேனியுறு மின்று. (க)

### கலித்துறை.

உதித்தாய்திசழ்நல்லைசுற்றுயெர்நூலுமுலகமெங்கும்
விதித்தாய்பரமபதிசிவ ஞானமெனவேறுமதஞ்
சதித்தாய்பின்னுறுமுகநாவலசற்குருமணிநீ
கதித்தாய்பரமபதமடியேமென்றுகாண்குவமே. (உ)

உருவுடம்பாறுமுகநாவலன்விடுத்தோங்குமுத்தி
மருவுடம்பாக்கொண்டவாவென்பராவென்பர்மற்றறியா
ரருவுடம்பாகியொருநோயுமற்றவவன்புகழாந்
திருவுடம்பானதுநீடூழிகாலந்திகழ்ந்திடுமே. (ங)

### விருத்தம்.

திருவாளன்றிருவெழுத்தைந் திடையறுதொலிக்குமெழிற் றிருவாக்குஞ்சற், குருபாதங்கருதுளமும் விபூதியொளிதயங்குதிருமேனியுஞ்சொற், பொருளாழுந்திராவிடநின்மலமறைகொடிருக்காமும்பொலிந்தநல்லை, யருளாளனறுமுகநாவலனெனங் குருபானுக்கடிமைசெய்வாம்.

தற்காலஞ் சென்னையி லெழுந்தருளியிருக்கின்ற

ஸ்ரீமத்

திருநெல்வேலித் தண்டபாணி சுவாமிகள்

ஸ்ரீ@ஸ்ரீ

ஆறுமுகநாவலரவர்களடைந்தமையைக் கேள்வியுற்று

ஆராமை மிகுதியினாலே

## சிவபெருமானைநோக்கி அருளிச்செய்த பதிகம்.

---

### நேரிசை வெண்பா.

அன்பர்களுக் காதரமா மாறுமுக நாவலனைத்
தன்பதத்திற்சேர்த்த சிவசங்கரன் பால்—வன்பர்களை
வெல்லாமுன் பூதலத்தை விட்டுவரச் செய்தவிதஞ்
சொல்லாயென் பார்நந் துணை. (௧)

### கலிப்பாக்கள்.

சொல்லூகமின்றியிகழ்துட்டமதப்புட்கடமை
வல்லூறுபோலடக்கும்வன்மையுறுநாவலனை
நல்லூரில்வையாதிந்நாளேனின்பாலழைத்தாய்
பல்லூழிகண்டோர்பரவும்பரசிவமே. (௨)

பங்கமலியுநெறிப்பாழிமதயானைகட்கோர்
சிங்கமெனவேசிறந்தபுகழ்நாவலனை
யங்கணிலத்தன்பரழவேனின்பாலழைத்தாய்
செங்கணெடுமாலைச்சினவிடையாக்கொள்சிவமே. (௩)

புண்காதவித்தருந்தும்பூரியரெல்லாநடுங்க
வண்கார்முகிலெனவேவாய்திறக்குநாவலனைத்
தண்கார்கடற்பார்தயங்கநின்பாலேனழைத்தா
யெண்காற்பெரும்பறவையென்னுமுருக்கொள்சிவமே. (௪)

சைவசமயத்தனிக்கொடிபோற்றூரணியின்
மெய்வழக்கேநாளும்விளக்கியதோர்நாவலனைப்
பொய்வகுக்கும்பாழ்நெறிகள்பொன்றுமுனேனழைத்தா
யைவர்களுமாயவர்க்கோராதரமுமாஞ்சிவமே. (ரு)

ஈழமுதற்றென்றேடிருண்மூழ்கிப்போகாமல்
வாழவைத்தசைவமருந்தாயநாவலனைக்
கூழனையாரோங்கநின்பாற்கூட்டியவாறென்னேயோ
வாழமுந்நீர்நஞ்சுண்டழியாதவிர்சிவமே. (சு)

செய்யதமிழ்மூன்றுந்திறனழிந்துபோகாமல்
வையமிசைவிளக்கும்வாய்மையுறுநாவலனைத்
தூய்யமனத்தொண்டர்துணுக்கமுறவேனழித்தாய்
மையணிந்தகண்ணியொடுமால்விடையூருஞ்சிவமே. (எ)

அன்றுவடலூராருந்தமிழ்ப்பாவல்லானைக்
கொன்றுவிட்டநீதிக்குறையொன்றும்போதாதோ
வின்றுநல்லூர்நாவலவரேற்றினையுமேனழித்தா
யொன்றுபட்டநெஞ்சருணர்ந்தேத்துமொண்சிவமே. (அ)

வில்லடிக்குவாளிவிரைந்தளிக்கைமெய்யென்று
னல்லபுகழோங்குநல்லூர்நாவலனைநானிலத்தோ
ரல்லலொழிந்தின்புறுமுனங்கழைத்தனீதிகொலோ
புல்லறிஞர்தேறுப்பொருளாம்புகழ்ச்சிவமே. (கூ)

கள்ளைநிகர்சொல்லாற்கருத்தருக்குங்கன்னியர்மா
லெள்ளையொத்துந்தோயாதிலங்குபுகழ்நாவலனைக்
கொள்ளையருணல்கியொன்றோர்குன்றவைத்துப்பார்த்திலையே
பிள்ளையிரண்டுபெற்றும்பேயுடனாடுஞ்சிவமே. (கo)

நால்வரனையாளொருவனுனிலத்திற்றோன்றுதலாற்
பால்வணனீறோங்கப்பசுவாழவேண்டுமென்றுன்

காவ்வணங்குநாவலனைக்காண்பதன்முனேனழைத்தாய்
செல்வளநீர்த்தில்லைச்சிதம்பரத்தில்வாழ்சிவமே. (சக)

ஆறுமுகநாவலனையைந்தாங்குரவனருட்
பேறுகண்டுதுள்ளாமுன்பெற்றமுடையானழைத்த
தேறும்விதத்தாற்றிருப்புகழோன்செப்புமிலை
கூறுமவர்பலருங்கூற்றன்வழக்கெய்தாரே. (சஉ)

---

ஸ்ரீ@ஸ்ரீ

நாவலரவர்களுடைய மருகரும் மாணாக்கரும்

வித்துவசிரோமணியுமாகிய

## ஸ்ரீமத் ச. பொன்னம்பலபிள்ளை.

---

### நிலைமண்டில ஆசிரியப்பா.

திருமகள்கொழுநன் கருமனத்தழுக்கா
லருணனிகருதா தகந்தைமேவி
யெருத்தத்திலங்கு பருத்தமருப்பும்
பணைத்துக்குறுத்த தாத்ததாளு
நிமிர்ந்துகுவிந்து நீண்டநாசியுங்
குன்றிக்கண்ணு நீலமேனியும்
பொலிந்தகேழற் பொலனுருவெடுத்துப்
பாதலந்துரீஇக் காணுப்பாதமும்
புண்டரிகத்துறை யண்டப்புத்தேள்
சிறுகணுமங்குச முறமூர்ந்துண்டமு
மாதிரமளக்குந் தாவில்சிறையும்
புயங்கமெட்டிற் றியங்கிக்கலங்கக்

கொழுவிக்கிழிக்கு முகிரார்தாளும்
பொருப்பினைப்பொரீஇத் தருக்குமேனியுங்
குலவுபுண்டரமா யிலகுசேண்போ
யண்டரண்ட மளந்துங்காளுக்
கூவிளமறுகு கொன்றைதும்பை
மாவிணர்மத்தம் வதிமதிமுடியு
முடையசங்கர னெண்மலரடியை
யகத்திலிருத்தி யருச்சனைபுரிந்தோய்
தெய்வவிரதனுந் துய்யனேய்க்கு
நயிட்டிகப்பிரம சாரிநீயெனினுந்
தகவெனரிவையை யிதமுறத்தழீஇப்
பல்லுயிர்க்கருளாஞ் செல்வனைத்தந்தே
சிவனடியவரா மவமில்விருந்தைப்
புறந்தந்திடலாற் சிறந்தவறிஞ
ரில்லறத்தோன்மற் றிவனெனக்குழீஇச்
சொல்லிவழுத்த மல்குதூயோ
யெம்பந்தமறுக்குஞ் சம்பந்தநாமனு
மாலமர்கடவுளா மால்விடையோனை
யைங்கதிப்பரியிற் றங்குவித்தோனு
மிடங்கர்வாயி லடங்குமறையோ
னுபவீதமன்ற லுறவிதித்தோனு
மும்மதக்களிறு தன்னைவந்திக்கப்
பானைவந்தித்த வரனார்சீலனு
மொருவடிவெடுத்தென வருளொடுபொலிந்தோய்
கொடுங்கோலில்லாக் கடுங்கோன்வழுதியா
னடைபெற்றுலவிய கடையில்காட்சித்
தலைச்சங்கத்துக் கலைப்புலவோராந்
திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளுங்
குன்றமெறிந்த குமரநாயகனுஞ்
சந்தனப்பொதியச் செந்தமிழோனு
மதித்தபுலமை கதித்தமேன்மையோ

யைந்தையடக்கி யாறைவென்றே
யொன்றையுறவுணர்ந் தேழையொருவினே
யிலங்கையிற்கொடுங்கோல் கலங்காதோச்சுபு
மறங்கள்வளர்த்த பறங்கிமன்னர்
குடியாயுள்ளோ ரிறையாவொவ்வோ
ரான்கன்றன்பா யாமுணவளித்தல்
வேண்டுமென்றிசைத்த வெம்பணிமரும
னாடொறுங்கொடுத்தல் கண்டுளனைந்தே
யிப்பவவரசர்தேத் திருத்தலுங்கொடிதெனத்
திருநெல்வேலியாந் தனதூர்நீங்கி
யுத்தமதிசையெனு முதக்கிற்பொலியுங்
கவுடதேசம் விதியினடையூஉ
வாரியமாகும் பாரியபரவை
வழப்பருகிப் பிறழ்கருமுகிலா
மகத்துறவுடனே புறத்துறவடைந்த
வரதஞானப் பிரகாசவள்ளல்
பிறங்கையுற்ற வறங்கெழுமரபோ
யடியவருளத்திற் குடியாயிருத்தலி
னிதமயல்விளைக்கு மதன்மதனீக்கலி
னாணவமாயை கன்மமெனப்படு
மும்மலின்ஞான முழுத்தழனகையாற்
பொடிபட்டொழிய வடல்புரிமேன்மையின்
வாதனைபுரியும் பூதனைகடியுயிர்
பாலொடுபெருகிய நீணிறமாயோன்
செங்கருங்கரங்களிற் சீர்செறியுங்கர
மொன்றாலிருகுவ டன்றேந்தியதென
வுந்தியொழுக்கேந்திய நிந்தையிலம்மச்
சங்கரிதனையொர் பங்கினில்வைத்த
நிர்க்குணநின்மல நித்தியானந்த
தற்பரஞ்சிவ சம்புநிகர்த்தோ
யரனடியவரி னதிகனாதலிற்

செறிதுயில்றச்செறுத் தறிதுயில்மர்தலிற்
றிருமகடழுவிக் கருமைமேவலி
னுலகளந்துண்ட வொருவனொத்தோய்
நாமகள்காமுறு கோமகனாதலின்
வேதவியலை விளங்கவிரித்தலிற்
போதவியலார் வேதன்போன்றோய்
தொல்காப்பியனா மொல்காப்புகழுறு
முனிவரனருளிய துனியினடைசேர்
மகன்வினைகிளப்பின் முதனிலையியற்றே
யெனுஞ்சூத்திரவிதி யியைவினையிகந்தே
யுட்டெளிவுடைய பட்டணத்தடிகள்போ
லன்னையையடிபணிந் தாதரித்திட்டோய்
தென்கோவையென்னுஞ் சீரார்நகர்வாழ்
மேழிக்கொடியோர் வாழ்விற்குலாவ
வவதரித்திட்ட வருந்தமிழ்க்கவிஞனை
மானுவியல்பிற் சேனாதிராய
முதலியுமவன்பாற் கலையெலாங்கற்று
மதியாக்கலைஞக் குதிநவ்விகட்கோர்
புனப்புலிப்போத்தா மனப்புலிமுதலி
பெற்றிடுபெற்றி யுற்றிடுசீர்த்திச்
சரவணமுத்து முதலியாம்புலவனுந்
தேடியபல்புக ழானவையடைய
வின்னுநிற்பனவிப் பெருமன்புகழைப்
பொலம்பெறத்தழீஇய நலங்கொள்பேருவலனச்
சொற்பயில்பண்டிதர் மெச்சுசீர்த்தியோய்
செந்நாப்புலவராஞ் சீர்சான்மணிக
ளோவலின்றி யுறுமாகரமுந்
தென்மொழியதனிற் றுன்னியவணிசே
ரிரகுவம்மிசப்பெய ரியையிலக்கியத்தைத்
துரிசறவியற்றி வரிசைபடைத்த
வரசகேசரியாம் புரையின்மேதையற்குக்

சேட்டனுய வாட்டமில்கவிகைப்
பராாசசேகர னென்னும்பற்ருர்
பணியுமரசற் கணிகோணகரமு
மாகியநல்லையாம் பேரியநகருறை
சத்தியவுத்தம வித்தகவேளாண்
குலதீபம்மென நிலவியகந்தவே
ளரிதிற்புரிந்த கரிசகனேன்பால்
வானோர்போற்று கான்முளையாகி
யாறுமுகனெனும் பெயராதரித்த
ப்ரமகுரவ வரமிகுநிலைய
பாரினைத்தாங்கு பணுடவிபொறுத்த
சேடன்றுதிக்க வேலாச்சீர்த்திய
பத்தரைத்தாங்குமெய் பயில்காருண்ணிய
சிந்தாமணியே நந்தாவிளக்கே
...ணகருத்தே யெண்ணேயமிர்தே
...யிரே யுல்வாவொளியே
த்தை வசுமதிநிறுவி
வேதா கமங்களினரும்பொரு
...ந் திரிபற்றுணர
யியம்புமெந்தா
...மெலாம்
வுன்னப்பெறினும்
றணிபெறு மூன்றையும்
விற்புகுத்திய
லைத் தேமொழிமடவார்
...வ லெண்ணினுழைய
...மாகிப்
...ழன்றிட்டனம்.
அதனுல்
...வுடைத்தாயினு
மன்னியவொக்கலைப்

பொருளெனக்கொளாதுன் கழலேபேணி
நின்னடித்தொண்டே மன்னநிகழ்த்திய
சதாசிவனுக்குத் தாஞ்செறிதொழும்பனை
யொளிகொடிருவுளத் துள்ளாதிகந்தே
யாயிரத்தெண்ணூற் றிரண்டெனவறையுஞ்
சாலிவாகனசகவற் சரநிகழ்
தரமார்கின்ற பிரமாதிவருடத்
தெருக்கான்மதியிரு பத்தொருதேதிசேர்
களங்கமில்லாப் பனிங்கின்வாரமு
மபரபக்கத் தமைசத்தமியும்
வடுவறுசிறப்பிற் கொடுநுகநாளு
மட்கிலொளிசேர் விட்கம்பயோகமு
நிலைஇயமேன்மை யுலவாவேல்வையி
லவனேதானே யாகியரனடி
நீழலினித்தியா னந்தம்பெறீஇச்
செம்மாந்திருத்தல் சீரோவுனக்கே. (க)

## வெண்கலிப்பா.

தூயநல்லைத்திருநகரிற் றுளக்கமற வவதரித்து
மாயவல்லற்பரசமய மடியவருணனிபுரிபூஉச்
சங்கரனாருட்சமயந் தழைக்கவொளிர்பிரசங்க
மிங்கெமக்கீந்தருள் குருவா மெழிலாறுமுகவாநின்
னருள்விழியுந்திருநீற்றி னழகாருமுகமதியுங்
கருமலத்தையறப்பாற்றுங் கமலச்செஞ்சீறடியு
நினையாமன்மகளிரல்கு னிரையத்திலமிழ்ந்தினம்யா
மினையமயலேகுவ தெப்போது. (உ)

## வெண்பா.

செஞ்சடையன் வெண்ணீற்றன் சிற்றம்பல முதல்வன்
மஞ்சடையுங் கண்டனடிமறவா— நெஞ்சுடைய
வாறுமுக வையற்கே யாட்செய்யப் பெற்றனம்யாம்
வேறறங்கள் வேண்டாவெமக்கு. (ங)

சங்கேந்து மாற்கரிய சங்கரனைத் தன்னிதய
பங்கேருகம்வைத் பண்பானை—யெங்கோனை
யாறுமுக நாவலனை யர்ச்சித் தடிபணியிற்
பாறும் பவநோய் பறிந்து. (௪)

தாடலைபோற் சங்கரனைச் சார்ந்தடங்கி நின்றிடுநின்
பாடலையா நற்பதத்தைப் பாடளியா—லாடலையா
வாறுமுக நாவலசீ ரத்தசிற்ப நாயடியேம்
வீறுமின்ப வீட்டைதன்மெய். (௫)

## கலித்துறை.

திருவஞ்செழுத்தின் றிகழ்ச்சியெங்கேசெபகண்டியெங்கே
யுருவஞ்சிறக்கவொளிவிடுநீற்றினுயர்ச்சியெங்கே
யருவம்படைத்தமதனுற்றலட்டவறுமுகனு
மொருவன்சிவமதம்போல்யேசுமார்க்கத்தையுன்னிடினே. (௬)

ளியைக்கணிப்பிலறம்புரியப்
பயனைப்பிறவிக்கடல்கடக்க
முதவுறுமோடத்தையாறுமுக
யப்போற்றிடிற்கூற்றுநடுங்கிடுமே. (௭)

னயன்பர்க்கெளியவனைக்
தையைக்கூற்றையுதைத்தவனைத்
தியெனச்சாதிக்குஞ்சைவமதை
முகவெந்தையையேத்துமினே. (௮)

## சிந்தியல் வெண்பா.

ின் கூறுமின் கூறுமின்
விழுமுன் னமரங்கா

## தரவு கொச்சகக்கலிப்பா.

மதிவளருப்பொழினல்லைவளம்பதியில்வதிந்தருளிக்
கதியுதவுமறுமுகநாவலவெந்தைகழல்பணிந்தோர்
விதியரியாமிருதேவர்வியோமம்பார்தரீஇக்காணச்
சதியுலவுபதசிவசங்கரனுலகிற்றயங்குவரே. (க(

## நேரசைமுதலாகவந்த கட்டளைக்கலிப்பா.

அத்திமாமூலைமாதுன்கழலிணையன்றுகண்டறியாதவள்கண்டளி
கத்துமாவளகஞ்சரிந்தேவிழக்காதுமன்மதப்பாவியம்பாலழிந்
தெய்த்துவெம்மையளாகியிரங்கிநல்லின்பவுண்டிவெறுத்தான்றுளிடை
பத்தியார்நல்லையாறுமுகாவறம்பார்த்தவாவெனைப்பாரென்றலறுமே

## ஈற்றடிமிக்குவந்த நான்கடிக் கலித்தாழிசை.

பூமேவுமாம்பொழிலிற்போகுமிளமாக்குயிலே
மாமேவுவாதின்கண்வலியேசுமதமழித்த
பாமேவுசீராறுமுகபரமகுரவனெனுங்
கோமேவுபுண்ணியன்றன்றாணிணைந்துகூவாயே
கோலநல்லைமாமுனிதாள்யான்மகிழக்கூவாயே. (கஉ

## முற்றிற்று.

சிவபிரான் திருவடிவாழ்க.

சேட்டனாய வாட்டமில்கவிகைப்
பரராசசேகர னென்னும்பற்றார்
பணியுமரசற் கணிகோணகரமு
மாகியநல்லையாம் பேரியநகருறை
சத்தியவுத்தம வித்தகவேளாண்
குலதீபம்மென நிலவியகந்தவே
ளரிதிற்புரிந்த கரிசகனென்பால்
வானோர்போற்று கான்முளையாகி
யாறுமுகனெனும் பெயராதரித்த
பரமகுரவ வரமிகுநிலைய
பாரினைத்தாங்கு பணாடவிபொறுத்த
சேடன்றுதிக்க வேலாச்சீர்த்திய
பத்தரைத்தாங்குமெய் பயில்காருண்ணிய
சிந்தாமணியே நந்தாவிளக்கே
கண்ணேகருத்தே யெண்ணேயமிர்தே
யியுருக்குயிரே யுவ்வாவொளியே
பசுபதிமதத்தை வசுமதிநிறுவி
யவனருள்வேதா கமங்களினரும்பொரு
ளேழையேமையந் திரிபற்றுணர
வினிதிற்றிரட்டி யியம்புமெந்தா
யாமெலாம்
நின்னடியேமென வுன்னப்பெறினும்
பணிகரிகுயிலென் றணிபெறு மூன்றையும்
புற்றிற்கானின் மாவிற்புகுத்திய
சிற்றிடைப்பணைமுலைத் தேமொழிமடவார்
கண்ணெனுங்காலவே லெண்ணினுழைய
நெஞ்சமழிந்த நிலையமாகிப்
பாடிகாவலிற் பட்டுழன் றிட்டனம்.
அதனால்
எமைநீயிகத்த லைவுடைத்தாயினு
மன்னையயத்தனை மன்னியவொக்கலைப்

பொருளெனக்கொளாதுன் கழலேபேணி
நின்னடித்தொண்டே மன்னநிகழ்த்திய
சதாசிவனுருக் தாஞ்செறிதொழும்பனே
யொளிகொடிருவுளத் துள்ளாதிகந்தே
யாயிரத்தெண்ணூற் றிரண்டெனவறையுஞ்
சாலிவாகனசகவற் சரநிகழ்
தரமார்கின்ற பிரமாதிவருடத்
தெருக்கான்மதியிரு பத்தொருதேதிசேர்
களங்கமில்லாப் பனிங்கின்வாரமு
மபரபக்கத் தமைசத்தமியும்
வடுவறுசிறப்பிற் கொடுநுகநாளு
மட்கிலொளிசேர் விட்கம்பயோகமு
நிலைஇயமேன்மை யுலவாவேல்லையி
லவனேதானே யாகியரனடி
நீழலினித்தியா னந்தம்பெறீஇச்
செம்மாந்திருத்தல் சீரோவுனக்கே. (க)

### வெண்கலிப்பா.

தூயநல்லைத்திருநகரிற் றுளக்கமற வவதரித்து
மாயவல்லற்பரசமய மடியவருணனிபுரியூஉச்
சங்கரனாருட்சமயந் தழைக்கவொளிர்பிரசங்க
மிங்கெமக்கீந்தருள் குருவா மெழிலாறுமுகவாநின்
னருள்விழியுந்திருநீற்றி னழகாருமுகமதியுங்
கருமலத்தையறப்பாற்றுங் கமலச்செஞ்சீறடியு
நினையாமன்மகளிரல்கு னிரையத்திலமிழ்ந்தினம்யா
மினையமயலேகுவ தெப்போது. (உ)

### வெண்பா.

செஞ்சடையன் வெண்ணீற்றன் சிற்றம்பல முதல்வன்
மஞ்சடையுங் கண்டனடிமறவா-- நெஞ்சுடைய
வாறுமுக வையற்கே யாட்செய்யப் பெற்றனம்யாம்
வேறறங்கள் வேண்டாவெமக்கு. (ங)

சங்கேந்து மாற்கரிய சங்கரனைத் தன்னிதய
பங்கேருகம்வைத் பண்பானை—யெங்கோனை
யாறுமுக நாவலனை யர்ச்சித் தடிபணியிற்
பாறும் பவநோய் பறிந்து. (௪)

தாடலைபோற் சங்கரனைச் சார்ந்தடங்கி நின்றிடுநின்
பாடலையா நற்பதத்தைப் பாடளியா—லாடலையா
வாறுமுக நாவலநீ ரத்தசிற்ப நாயடியேம்
வீறுமின்ப வீட்டை தன்மெய். (௫)

## கலித்துறை.

திருவஞ்செழுத்தின் றிகழ்ச்சியெங்கேசெபகண்டியெங்கே
யுருவஞ்சிறக்கவொளிவிடுநீற்றினுயர்ச்சியெங்கே
யருவம்படைத்தமதனுற்றலட்டவாறுமுகனு
மொருவன்சிவமதம்போல்யேசுமார்க்கத்தையுன்னிடினே. (௬)

கற்றவர்பற்றுங்கனியைக்கணிப்பிலறம்புரியப்
பெற்றவர்பெற்றபயனைப்பிறவிக்கடல்கடக்க
வுற்றவர்க்கென்றுமுதவுறுமோடத்தையாறுமுக
நற்றவவெந்தையைப்போற்றிடிற்கூற்றுநடுங்கிடுமே. (௭)

அமரர்க்கரியவமலனையன்பர்க்கெளியவனைக்
குமரக்கடவுடன்றந்தையைக்கூற்றையுதைத்தவனைத்
தமரப்பெருஞ்சீர்ப்பதியெனச்சாதிக்குஞ்சைவமதை
யெமர்கட்கருளுமறுமுகவெந்தையையேத்துமினே. (௮)

## சிந்தியல் வெண்பா.

கூறுமின் கூறுமின் கூறுமின் கூறுமின்
வீறுலவு யாக்கை விழுமுன் னமரங்கா
ளாறுமுக வையன் புகழ். (௯)

### தரவு கொச்சகக்கலிப்பா.

மதிவளருப்பொழினல்லைவளம்பதியில்வதிந்தருளிக்
கதியுதவுமறுமுகநாவலவெந்தைகழல்பணிந்தோர்
விதியரியாமிருதேவர்வியோமம்பார்துரீஇக்காணுச்
சதியுலவுபதசிவசங்கரனுலகிற்றயங்குவரே. (௪௦)

### நேரசைமுதலாகவந்த கட்டளைக்கலிப்பா.

அத்திமாமுலைமாதன்கழலிணையன்றுகண்டறியாதவள்கண்டளி
கத்துமாவளகஞ்சரிந்தேவிழக்காமன்மதப்பாவியம்பாலழிந்
தெய்த்துவெம்மையளாகியிரங்கிநல்லின்பவுண்டிவெறுத்தான்றுளிடைப்
பத்தியார்நல்லையாறுமுகாவறம்பார்த்தவாவெனைப்பாரென்றலறுமே.

### ஈற்றடிமிக்குவந்த நான்கடிக் கலித்தாழிசை.

பூமேவுமாம்பொழிலிற்போகுமிளமாக்குயிலே
மாமேவுவாதின்கண்வலியேசுமதமழித்த
பாமேவுசீராறுமுகபரமகுரவனெனுங்
கோமேவுபுண்ணியன்றன்றுணிணைந்துகூவாயே
கோலநல்லைமாமுனிதாள்யான்மகிழக்கூவாயே. (௪௨)

முற்றிற்று.

சிவபிரான் றிருவடிவாழ்க.

# பிழை திருத்தம்.

| பாட்டு. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- |
| கூ | கலித்துரை ... | கலித்துறை |
| உஎ | சமைய ... | சமய |
| ,, | படும்சமய ... | படுசமய |
| கூரு | பத்தினிற்பொன் பன்னொன்றி | பத்திற்பொனிபன் னிரண்டி |
| சஉ | னம்மைமந்தர் ... | னன்மைந்தர் |
| சுச | தமிழிற்றற்கு ... | தமிழிறோங்கு |
| அக | துண்மயெ ... | துண்மையெ |
| அஎ | துலகிலெ ... | துவையத்தெ |
| கருஉ | பெற்றங் ... | பெறறெங் |
| உஙச | மெய்ச்சி ... | மெச்சி |
| உசரு | கோட்டைட் ... | கோட்டை |
| உசுஉ | சூழ் எடுகூதில் ... | சூழ்தில் |
| உசுரு | உளறு ... | ஊளறு |
| ஙஉஅ | வெல்யகதி ... | வெல்மக்தி |